# சோழவரம் விருந்தாளிகள்

சென்னை சோழவரத்தில் நடந்த பந்தயங்களில் கலந்துகொள்ள வந்த சில அயல்நாட்டு மோட்டார் சைக்கிள் வீரர்கள்:

**ரோல்ஃப் பிராண்லே:**

ஒரு ஜெர்மானிய மெக்கானிக்கிடம் உதவியாளராய் இருந்து, மோட்டார் சைக்கிள் பற்றி எல்லா விஷயங்களையும் தெரிந்துகொண்டு 1972ம் வருடம் முதல் பல்வேறு நாடுகளிலும் பந்தயங்களில் பங்கேற்கிறார் இவர். இவரது மோட்டார் சைக்கிள் '250 சிசி யமஹா' மாடல். 1977ம் வருட ஜெர்மானிய சாம்பியன்.



ரோல்ஃப் பிராண்லே

**வோங்க் காங் கிங்**

இந்த ஹாங்காங்காரருக்கு வயது 27. இருபதாம் வயதிலிருந்து பந்தயங்களில் கலந்து கொள்கிறாராம். இரு முறை விபத்துக்குள்ளாகி காலில் எலும்பு முறிவு ஏற்பட்டதாம். ஆனாலும், தொடர்ந்து பந்தயங்களில் பங்கேற்பேன்' என்கிறார் உறுதியுடன்.



வோங்க் காங் கிங்

**ஜெராட் வோக்ட்**

1968 முதல் பந்தயங்களில் கலந்துகொள்ளும் 31 வயதான ஜெர்மன் நாட்டவர். ஜப்பானைச் சேர்ந்த 'ஸாகி' என்ற எஞ்சினீயர் இவருக்கென பிரத்தியேகமாய், 'யமஹா' மாடல் மோட்டார் சைக்கிள் தயாரித்துள்ளார். முதல் முறை விபத்துக்குள்ளானபோது இனி பந்தயங்களில் கலந்து கொள்வதில்லை என முடிவு செய்து விட்டாராம். ஆனால் மூன்று வார காலம் ஆஸ்பத்திரியில் தங்கியிருந்தபோது, தன்னைப் போல அடிபட்டவர்கள் பலரையும் சந்தித்தபின், தன் முடிவை மாற்றிக் கொண்டு விட்டாராம்.



ஜெராட் வோக்ட்

**டெரக் ஹாக்ஸ்லே:**

29 வயதான இந்த இங்கிலாந்துக்காரருக்கு மோட்டார் சைக்கிள் பந்தயங்களில் ஈடுபடுவதே தொழில். ஆண்டுதோறும் மோட்டார் சைக்கிளை மாற்றுவது இவரது பழக்கம். தற்போது வைத்திருப்பது 350 சிசி யமஹா. இந்தியாவுக்கு வருவது இதுவே முதல் தடவை. ஆண்டுக்குச் சராசரி 30 பந்தயங்களில் கலந்து கொள்கிறார். முதல் தடவை கலந்து கொண்டபோது ரொம்ப திரில்லிங்காய் இருந்ததாம். ஆனால்

டெரக் ஹாக்ஸ்லே



ஆல்வோஸ் வெட்டர்



கார்ரேஸில் கலந்து கொண்ட இந்திரா சுப்பிரமணியன் - விஜயா பார்த்தசாரதி



ரோலண்ட் பெக்கர்







### போட்டி முடிவு

நான்கு விடைகளைச் சரியாக எழுதி ரூ. 100 பரிசினைச் சமமாகப் பகிர்ந்துகொள்கிறவர்கள்;

(1) பிச்சமணி, 25, 2ம் தெரு, சிதம்பர நகர், தூத்துக்குடி 628003. (2) வி. கிருஷ்ணன், 23, கிரி தெரு, ராம்நகர், அம்பத்தூர், சென்னை-53. (3) ஏ. செந்தில், 7, திரு.வி.க. சாலை, ஈரோடு-638004. (4) எஸ். எச். பிரியா, சேனுபதி நிலையம், அன்னபூர்ணு லே அவுட், சாயி பாபா காலனி, கோவை-38 (5) எம். மிலாப் சந்த், 4, பெரிய எராகலி தெரு, மாயூரம்-609002. (6) ஆர். வத்சலா ராமகிருஷ்ணன், 28-671, பெரிய கடை தெரு, கோயம்புத்தூர்-641001. (7) கு. குருசங்கர், ஒன்பதாம் வகுப்பு 'இ' பிரிவு, சைனிக் பள்ளி, அமராவதி நகர், 642102. (8) கே. எஸ். ரகுநாதன், 22, புஷ்பநகர் மெயின் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை-600034. (9) என். சுரேஷ் பாபு, 57, அரிசி கோல்வன் தெரு, சிவகாசி 620123. (10) டி. சண்முகநாதன், சண்முகா 'இயேட்டர், இராமநாதபுரம். (11) வி. ரவிசந்தர், 10-1-1816 ஷாம் நகர், ஹைதராபாத்-4. (12) எஸ். ரகுபதி, 9, மாடி, லக்ஷ்மி தெரு மேற்கு மாம்பலம், சென்னை-33. (13) எஸ். வேங்கடராமன், 537, செக்டார் வி. வி.ஜி.எஸ் குவார்ட்டர்ஸ், பாண்டப்(கிழக்கு) பம்பாய்-78. (14) கிரிதர் ராதாகிருஷ்ணன், பிளாக் 11, 12, எல். ஜி. ஆஸ்பத்திரி ஸ்டாஃப் குவார்ட்டர்ஸ், கிருஷ்ணபாக், மணிநகர், ஆமதாபாத்-380008. (15) ஆர். மோகன், 98, சங்கர நாயுடு தெரு. (ஊர் பெயர் தெளிவாக இல்லை). (16. வி. ரமேஷ், பிளாக் 17 குவாட்டர்ஸ் நெ. 135, வி. பி. டபிள்யூ டி. குவார்ட்டர்ஸ். இந்திரா நகர், சென்னை-20. (17) ஜி. ஸ்ரீனிவாசன், வி. 37, ஏழாவது கிராஸ் என். ஈ.ஈ தில்லைநகர், திருச்சி-620018, (18) பெயர் விலாசம் இல்லை.

அந்தப் பந்தயத்திலேயே முதல் விபத்தும் நடந்ததாம். இந்த வருட கிராண்ட் பிரியில் முதல் இடம், மற்றும் Cutfast Trophy இரண்டுமே இவருக்குத்தான்.

### ரோல்ஃப் பெக்கர்

முதலில் மோட்டார் கார் பந்தயங்களில் தான் கலந்துகொண்டார். 65ம் ஆண்டு முதல் மோட்டார் சைக்கிள் பந்தயங்களில் கலந்துகொள்கிறார். வயது 36. ஜெர்மானியர். விபத்துக்குள்ளாகி, முதுகெலும்பு முறிந்து, சில ஆண்டுகள் பந்தயங்களில் கலந்து கொள்ளவில்லை. மீண்டும் 75ல் காலில் நாலு இடங்களில் எலும்பு முறிவு. ஆனாலும் தொடர்ந்து பந்தயங்களில் கலந்து கொள்கிறார், விடாப் பிடியாய். 'இந்தியாவில் பிடித்த அம்சம் எது?' என்றால் Indian girls. They are so beautiful என்கிறார் குறும்புப் புன்னகையுடன்.

### ஆஸ்வோல்ட் வெட்டர்

நாலு குழந்தைகளுக்கு அப்பா. வயது 35. ஜெர்மன் நாட்டவர். ஐரோப்பிய நாடுகளில் மட்டுமே பந்தயங்களில் பங்கேற்று வந்த இவர் இந்த வருடம் முதல் தடவையாக சென்னை வந்தார். 1981ம் வருட ஜெர்மானிய சாம்பியன் இவர்தான்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**
புகைப்படங்கள்: **ரமணி**

### சைட் லைட்ஸ்

● சோழவரம் மோட்டார் சைக்கிள் பந்தயத்தில் வெற்றிபெற்ற சாம்பியன் ரஜனிக்கு நடிகை ஜோதி 'டைகர் எஸ்டேட்' என்ற கோப்பையைப் பரிசளித்தார்! ''நிஜமாகவா'' என்று மலைக்காதீர்கள்.

ரஜனி சாம்பியன் பரிசு பெறுவது 'புதுக் கவிதை' படத்தில்தான்! டைரக்டர் பாலசந்தர் தயாரிப்புக்காக டைரக்டர் எஸ். பி. முத்துராமனும் காமிராமேன் பாபுவும் தத்ரூபமாக மோட்டார் சைக்கிள் பந்தயங்களைப் படம் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

டைரக்டர் எஸ். பி. முத்துராமன் சொன்னார்: ''இத்தனை கூட்டத்துக்கு மத்தியில் ரஜனியை மோட்டார் சைக்கிள் ஓட்டச் செய்து படமெடுக்க முடியுமா? நேற்றே அவரது பந்தயக் காட்சியும் பரிசளிப்பு விழாவும் படமெடுத்துவிட்டோம்! இப்போது காமிரா மேன் பாபு மோட்டார் சைக்கிள் பந்தயத்தைச் சுட்டுத் தள்ளிக் கொண்டிருக்கிறார்!''

இரண்டையும் கச்சிதமாக இணைத்து விட்டால் ரஜனியே பங்கேற்ற பந்தயம் மாதிரி தானே திரைப்படத்தில் தெரியப் போகிறது!

● ''மோட்டார் சைக்கிள், கார் ரேஸெல்லாம் இப்போ கிரிக்கெட் லெவலுக்கு உயர்ந்துடுத்து!''

''எதனாலே அப்படிச் சொல்றீங்க?''

''கார் ரேஸ் மைதானத்தில் ஐந்து நட்சத்திர ஹோட்டல் தாஜின் உபசரணை. அங்கே ஒரு கப் காப்பி விலை இரண்டு ரூபாய்! பரிசளிப்பு விழாவும் தாஜில்தானாம்!''

-குண்டுமணி

# உங்கள் புதிய ஜான்ஸன் மிக்சர் கிரைண்டர் வேலை செய்யும் பொழுதே சூடான இலவச டிகாக்ஷன் காபி!




## JOHNSON®

## மிக்ஸர் கிரைண்டர்

## இதோ! இப்பொழுது

## ரூ. 85 மதிப்புள்ள இலவச பரிசுகள்!

முந்துங்கள்: பட்ஜெட்டுக்கு
முன்னதாகவே
வாங்கிடுவீர் இந்தச் சலுகை
ஸ்டாக் இருக்கும் வரை மட்டும்.

**Kashyap**

இன்ஸ்டன்ட் காபி
பர்கொலேட்டர்



Parade/BE/8211

**JOHNSON®** தென் இந்திய சமையலுக்கும் ஏற்ப மிக உறுதியானது

திருச்செந்தூர் கோவில் சரிபார்ப்பு அதிகாரி சுப்ரமணியப் பிள்ளையின் மரணம் பற்றி நீதிபதி பால் கமிஷன் அறிக்கை ஏற்படுத்திய பரபரப்பு இன்னும் ஓயாத நிலையில், மீண்டும் திருச்செந்தூர் கோவில் அர்ச்சகர் அண்ணாவி என்று அழைக்கப்படும் முத்து சுப்ரமணியத்தை, போலிஸார் அடித்து, துன்புறுத்தியதாய் செய்தி வெளியாகியுள்ளது. அங்கு நடந்தது என்ன? அதற்குப் பின்னணி என்ன? திருச்செந்தூர் தொகுதி நாடாளுமன்ற உறுப்பினர் கே. டி. கோசல்ராம் அவர்களைச் சந்தித்தபோது, பல விவரங்கள் தெரிய வந்தன. அவர் பிப்ரவரி நான்காம், ஐந்தாம் தேதிகளில் திருச்செந்தூர் சென்று, விசாரித்து, அறிந்திருந்த விஷயங்களைச் சொன்னார்:

“சென்ற ஜனவரி மாதம் 26ம் தேதி திருச்செந்தூர் கோவிலுக்கு கடவுள் தரிசனம் செய்ய ஒருவர் குடும்பத்தாருடன் ஒரு குழந்தையுடன் வந்திருக்கிறார். கோவிலைச் சுற்றிக் காட்டி அர்ச்சனை செய்வித்திருக்கிறார் அர்ச்சகர் அண்ணாவி. வந்த பெண்களும் குழந்தையும் நகைகளை அணிந்திருந்ததால் 'நகைகள் ஜாக்கிரதை' என்று சொல்லி யிருக்கிறார். வந்தவர்கள் போய்விட்டு, சுமார் பத்து நிமிடங்கள் கழித்து, மீண்டும் வந்து, 'குழந்தை போட்டிருந்த நகையைக் காணவில்லை. நீர் தான் எடுத்திருக்கவேண்டும்' என அர்ச்சகர் மீது குற்றம் சாட்ட, அண்ணாவி 'எனக்கு ஒன்றும் தெரியாது' என்று சொல்லியிருக்கிறார். வந்தவர்கள் போலீஸில் சொல்ல, திருச்செந்தூர் போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டரும், சப் இன்ஸ்பெக்டரும் அர்ச்சகரை ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போயிருக்கிறார்கள். அங்கே சுமார் இருபது நிமிடங்கள் தொடர்ந்து அடித்திருக்கிறார்கள். பூட்ஸ் காலால் எட்டி உதைத்திருக்கிறார்கள். சாப்பாடு தரவில்லை. அன்றைய இரவை போலீஸ் ஸ்டேஷன் வராண்டாவிலேயே கழித்திருக்கிறார் அர்ச்சகர்.

மறுநாள் நகை தொலைந்து போனதாய்க் குற்றம் சாட்டியவர், ஒரு மஃப்ட்டி போலீஸ்காரர் இரண்டு பேரும் வந்து அர்ச்சகரை 40 மைல் தொலைவில் ஒரு கிராமத்துக்கு அழைத்துக் கொண்டு போய், செருப்பாலும், லத்தியாலும் அடித்திருக்கிறார்கள். அதோடு நிற்காமல், சாராயத்தைக் குடிக்கும்படியும் வற்புறுத்தியுள்ளனர். அவர் மறுப்புத் தெரிவிக்கவே, மல்லாக்கப் படுக்க வைத்து வாயைத் திறந்து சாராயத்தை ஊற்றி யிருக்கின்றனர். அவரது பூணூலை அறுத்துள்ளனர். அம்மிக் குழவியால் முழங்கால்களை நசுக்கியுள்ளனர்.

மறுநாள் திருநெல்வேலியில் ஒரு டாக்டரிடம் அழைத்துச் சென்று 'கீழே விழுந்ததால் அடிபட்டு விட்டது' என்று சொல்லச் சொல்லிச் சிகிச்சை அளித்திருக்கின்றனர்.

விஷயம் திருச்செந்தூர் முழுவதும் பரவி இந்திரா காங்கிரஸ், தி.மு.க., கம்யூனிஸ்ட் கட்சி, ஜனதா என அனைத்துக் கட்சிகளும் இந்தச் சம்பவத்தைக் கண்டித்து போராட்டம் நடத்தின. இதில் அ. தி. மு. க. காரர்களும் கலந்து கொண்டனர். அனைத்துக் கட்சியினரும் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஊர்வலமாய்ச் சென்று, அண்ணாவியை அழைத்

# திருச்செந்தூரில்

× கே. டி. கோசல்ராம்







அண்ணாவி மீது கூறப்பட்டுள்ள புகார் மீது போலீஸ் ஸ்டேஷனில் FIR (First Information Record) செய்யப்படவில்லை. புகார்கள் மீது முதலில் FIR தயாரித்துவிட்டுத்தானே நடவடிக்கை எடுக்க வேண்டும்? ஸ்டேஷனின் ஜெனரல் டைரியில் எந்த விதக் குறிப்பும் இல்லை. இப்படி ஒருவரைப் பிடித்து வந்து அடித்துத் துன்புறுத்துவது சட்டத்துக்கு விரோதமானது.

இந்தச் சம்பவத்துக்குப் பின்னணி என்னவாய் இருக்கலாம்?

இது சரிபார்ப்பு அதிகாரி சுப்பிரமணியப் பிள்ளை மரணத்தின் தொடர்ச்சி — பால் கமிஷன் அறிக்கை வெளியிடப்பட்டதன் விளைவு என்றுதான் நான் நினைக்கிறேன். நீதிபதி பால் தமது அறிக்கையில், சுப்பிரமணியப் பிள்ளையின் மரணத்துக்குக் காரணம் கோவில் சம்பந்தப்பட்டவர்கள்தானே தவிர வெளியார் யாரும் இல்லை என்று திட்டவட்டமாய்க் கூறியுள்ளார். எனவே அறிக்கையின் பேரில் ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டால், கோவில் சம்பந்தப்பட்டவர்கள் தான் சாட்சி சொல்ல வேண்டியிருக்கும். எனவே இப்படி ஒரு அப்பாவியை அடித்துத் துன்புறுத்துவது யாரையோ திருப்தி செய்வதற்காகச் செய்யப்பட்டதுதான் என்றும், சுப்பிரமணியப் பிள்ளையின் மரணத்துடன் சம்பந்தப்பட்டவர்கள் தம்மால் எதையும் செய்ய முடியும் என்று மற்றவர்களுக்கு எச்சரிக்கை விடுக்க இப்படிச் செய்துப் போய் மருத்துவ மனையில் சேர்த்திருக்கிறார்கள். அ. தி. மு. க சட்டசபை உறுப்பினர் திரு கேசவ ஆதித்தன் உட்பட பல்வேறு கட்சிக்காரர்களும் உயர் போலீஸ் அதிகாரிகளுக்கும், முதலமைச்சருக்கும் தந்தி அனுப்பியுள்ளனர்.

நான் பிப்ரவரி 4, 5 தேதிகளில் திருச்செந்தூர் போயிருந்தபோது சுப்பையர், மகாதேவன் போன்ற சுதந்திரப் போராட்ட தியாகிகளையும், உள்ளூர்க் கட்சிப் பிரமுகர்களையும், மற்றும் பொது மக்களையும் சந்தித்துப்பேசினேன். சம்பவம்பற்றி விசாரித்தேன். அத்தனை பேருமே 'அண்ணாவி ஒரு அப்பாவி: இது போலத் திருட்டு எல்லாம் செய்யத் தெரியாத பிள்ளை. தானுண்டு தன் கோயில் வேலையுண்டு என்று இருக்கும் அண்ணாவி மீது இப்படி ஒரு பழியைச் சுமத்தி, சித்திர வதை செய்துள்ளது கடுமையாய்க் கண்டிப்பதற்குரியது' என்றுதான் சொன்னார்கள்.

துள்ளனர் என்றும், நகை காணாமல் போன விவகாரமே ஒரு நாடகம் என்றும் எண்ணத் தோன்றுகிறது.

முன்பெல்லாம் போலீஸ் சித்திரவதைகள் பிற மாநிலங்களில்தான் நடப்பதாய்ச் செய்திகள் வரும். இன்று தமிழ் நாட்டிலேயே அத்தகைய செயல்கள் பெருகிவிட்டன. திருச்செந்தூர் ஒன்றுதான் என்று இல்லை. தமிழ் நாடு முழுவதுமே போலீஸ் ஸ்டேஷன்கள் ஆளும் கட்சியினரின் அலுவலகங்களாய் மாறிவிட்டன. போலீஸ் துறையில் ஆளும் கட்சித் தலையீடு மிக அதிகமாகி விட்டது. தமிழ் நாட்டில் சட்டம், ஒழுங்கு மிகவும் பாதிக்கப்பட்டு விட்டது. நாம் எவ்வளவோ முன்னேறிவிட்ட நிலையில், இன்னும் போலீஸ் துறையில் மூன்றாந் தரமான சித்திர வதை முறைகள் கையாளப்படுகிறது என்பது மிகவும் வருத்தப்பட வேண்டியதும் கண்டிக்கத் தக்கதுமான விஷயம்.

பேட்டி: ஜூலி




கல்கி
1982 பிப்ரவரி 21
துன்மதி மாசி 9
மலர்: 40 இதழ்: 30
தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்


## வருகிறது பட்ஜெட்!

பட்ஜெட் சமர்ப்பிக்க வேண்டிய தருணம் வந்து விட்டதென்றால் பொருளாதாரம் மேலும் சற்று முன்னேற, சுபிட்சம் பெருகும் என்று மகிழ்ச்சியோடு அந்த நாளை எதிர்பார்க்க வேண்டியது போக, பட்ஜெட் என்றாலே மக்கள் அஞ்சி நடுங்குகிற நிலைமை தோன்றி விட்டது. அடுத்தடுத்து வந்த நிதி அமைச்சர்கள் பட்ஜெட்டை மேலும் சில வரிகள் போட்டு மக்களை கசக்கிப் பிழிகிற அஸ்திரமாகக் கருதினார்களேயன்றி தேசத்தைச் சுபிட்சப் பாதையில் முன்னேற்றுகிற ஒரு சாதனமாக எண்ணவில்லை.

பட்ஜெட்டுக்கு முன்பாகவே சில கட்டண விகிதங்களை உயர்த்துவதன் மூலம் பட்ஜெட்டின் கொடூரத்தைக் குறைத்துக்காட்டும் முயற்சி அண்மைக் காலமாக அதிகரித்து வருகிறது. ரயில்வே சரக்குக் கட்டணங்கள், தபால், தந்தி, டெலிபோன் கட்டணங்கள் எல்லாம் பட்ஜெட்டுக்கு முன்பாகவே அதிகரிக்கப்படுகின்றன. இதனாலெல்லாம் மனோதத்துவ ரீதியாக மக்களை ஏய்ப்பதில் வெற்றியை அரசாங்கம் அடையலாம். ஆனால், தேசப் பொருளாதாரத்துக்குத் தோல்வியே.

வரப்போகும் ரயில்வே பட்ஜெட்டில் பயணக் கட்டணங்கள் மேலும் உயரும் என்றும், பொது பட்ஜெட்டில் வரிகளின் சுமை இன்னும் அதிகரிக்கும் என்றும் பரவலாகப் பேசப்படுகிறது. வரிகள் உயர விலைவாசி உயரவும், விலைவாசி உயர ஊதியம் — பஞ்சப்படி உயரவும், பஞ்சப்படி உயர மேலும் விலைகள் உயரவும் பற்றாக்குறை பட்ஜெட்டால் பணவீக்கமும், பணவீக்கத்தால் விலைவாசி உயர்வும் விலைவாசி உயர்வால் அதிக ஊதியம் கோரி போராட்டங்களும் என்று இப்படியாக நாய் தன் வாலைப் பிடிக்க முயன்று சுற்றிச் சுற்றி வருவது போல் காரியங்கள் நடக்கின்றனவேயன்றி முன்னேற்றம் காணோம்.

ஓரளவுக்கு மேல் வரிச்சுமைகள் ஏறும்போது அது செயலூக்கத்தை அழிக்கிறது; வரி ஏய்ப்போர்தான் சுபிட்சத்துடன் வாழ முடியும் என்ற நிலைமையை உருவாக்குகிறது.

## பிரதமரின் ஆசை!

சமீபத்தில் பல்வேறு மத்திய அமைச்சகங்களின் காரியதரிசிகளிடையே பேசிய பிரதமர், 170 அரசு நிறுவனங்களில் 19,652 கோடி முதலீடு ஆகியிருந்தும் அவற்றின் ஒட்டு மொத்த லாபம் 81-82ன் முதல் அரை ஆண்டில் 48 கோடிதான் என்பதில் கவலையும் அதிருப்தியும் வெளியிட்டிருக்கிறார். லாபகரமாக இயங்கும் ஒரு சில அரசுத்துறை நிறுவனங்களும் ஏகபோக்கியம் காரணமாகவே அந்த லாபத்தை அடைகின்றன என்பதும் அவற்றின் செயல்திறன் அப்படியொன்றும் மெச்சத்தக்க விதத்தில் இல்லை என்பதும் ஆழ்ந்து நோக்கினால் பிரதமருக்குத் தெரியவரும். எனினும் லாபம் காண வேண்டும், நஷ்டத்தைத் தவிர்க்க வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டிருப்பதே பெரிய காரியம்தான். அரசுத்துறை நிறுவனங்கள் திறம்பட இயங்க முடியாமல் திணறுவதற்கான காரணங்களை ஆய்ந்து இடையூறுகளை நீக்க வேண்டும் என்றும் பிரதமர் கூறியுள்ளார். இதை மனப்பூர்வமாக வரவேற்கும் போதே தனியார் துறை நிறுவனங்களின் தோற்றம் அல்லது வளர்ச்சிக்கு உள்ள தடைகளையும் நீக்கப் பிரதமர் முன் வரவேண்டும் எனக் கோருகிறோம்.

அரசுத்துறை நிறுவனங்களைத்தான் அரசு நிர்வகிக்கிறது என்று யாரும் நினைக்க வேண்டாம். பர்மிட் - லைசென்ஸ் - கோட்டா மூலமும் பாங்குகள் அரசுடைமையாகி விட்டதால் நிதி வசதிகளை அளிப்பது அல்லது மறுப்பதன் மூலமும் தனியார் துறை நிறுவனங்கள் அனைத்தின் மீதும் அரசுதான் ஆதிக்கம் செலுத்துகிறது.

அடுத்த மூன்று ஆண்டுகள் முன்னேற்ற ஆண்டுகளாக இருக்க வேண்டும் என்கிறார் பிரதமர். அவர் ஆசை நிறைவேற அவர் கடைப் பிடிக்கும் பொருளாதாரக் கொள்கை மாறவேண்டும்.



## 6

சந்தியாவுக்கு இப்பொழுது இரட்டிப்பு மடங்குவேலை. மிகவும் கண்டிப்பான பள்ளித் தலைவியிடம் அவள் லீவு கேட்க அஞ்சி வேலைக்குப் போய்க் கொண்டிருந்தாள். காலை நொண்டிக் கொண்டு மிகவும் சிரமப்பட்டு வளைய வந்து கொண்டிருந்த அத்தைக்கு அதிக தொல்லை கொடுக்காது அவள் பொழுது புலரு முன்பே எழுந்து இன்னும் வேகமாக வீட்டு வேலைகளைக் கவனிக்க நேர்ந்தது. காலை டிபன் தயாரித்து பகல் சமையலையும் முடித்து வைத்து விட்டு நேரம் தவறாது பள்ளிக்குப் புறப்பட அவள் மிகவும் பாடுபட வேண்டி யிருந்தது. அத்தை தனிமையில் நொண்டி நடந்து உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது என்று கருதி வேலைக்காரப் பெண்ணைத் தான் திரும்பி வரும்வரை கூடத் துணைக்கு இருக்க வைத்துப் போக நேர்ந்தது.

இப்படி அவள் பல தொல்லைகள் நடுவே பொறுப்புக்களை ஏற்று வேலைக்குப் போய் வந்து கொண்டிருந்தாள். டாக்டர் கிரிதரன் அத்தையம்மாளைக் காண அதற்குப் பின் காலை வேளைகளில் இரு முறை வந்து போனதாகக் கேள்விப்பட்டாள்.

இரண்டு வாரமாகி விட்டன. இன்னமும் டாக்டர் தம் பீஸ் எத்தனை என்று சொல்லவில்லை. ஒரு சமயம் தொகை பெரியதாக இருந்தால் இரண்டு மாதத்தில் செலுத்தி விடுவதாகக் கேட்டுக் கொள்ள வேண்டும். முதல் முதலாக வைத்தியம் செய்ய வந்தவரிடம் பேரம் பேசிக் கெஞ்சுவது முறையா? பற்பல எண்ணக் கவலையுடன் அவள் அன்று மாலை பஸ் நிலையத்திலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தாள்.

அவள் வரு முன்பே வாசலில் வர்ணம் அழிந்து திட்டுத் திட்டான துருப்பிடித்த தகர டப்பாவை ஒத்ததொரு பழைய கருப்பு அம்பாசிடர் காத்திருப்பதைக் கண்டு நெஞ்சம் துணுக்குற்றாள்.

கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழையு முன்பே ஸாம்சனின் உற்சாகக் குரைப்பும், உரத்த குரலில் குமரேசன் அத்தான் பேசுவதும் கேட்டது. அவளைக் கண்டு ஓடிவந்து மேலே விழுந்து கொஞ்சிய நாயைத் தட்டிக் கொடுத்துச் சமாதானப்



# சாதாரண மனிதன்

## 'லக்ஷ்மி'

படுத்தியபடி. அவள் செருப்புக்களை நடையில் கழற்றி வைத்துவிட்டு உள்ளே சென்றாள்.

குமரேச அத்தானுக்கு உடும்புப் பிடி போன்றதொரு பிடிவாத குணம் உண்டு. கருமமே கண்ணான மனிதன். அதனால் எத்தகைய அவமானத்தையும் அசட்டையையும் சடுதியில் அழித்து விட்டு புது முயற்சியில் ஈடுபடச் சிறிதும் அஞ்சமாட்டார்.

அந்தி சாயும் வேளையில் அவருக்கு இங்கே என்ன வேலை? இப்பொழுது என்ன புதுக் கதையுடன் வந்திருக்கிறார்?...

கோபத்துடன் அவன் உள்ளே வந்தான்.

'தொழில் பட்டரையில் இன்னிக்கு ரொம்ப வேலை. நிக்க நேரமில்லாமல் தவிச்சுக்கிட்டிருந்தேன். பகல் சாப்பாட்டுக்கு வீட்டுக்குக் கிளம்பினப்போ மளிகைக் கடை சரக்கு எடுக்க டவுனுக்கு வந்த மாணிக்கத்தைச் சந்திச்சேன். தோட்ட வேலையாள் மாரப்பன் சொன்னதாகத் தகவல் கொடுத்தான். பயந்துட்டேன். பெரிய காயமாமே? இது மாதிரி சமயங்களில் உனக்கு நான் ஒருத்தன் இருக்கிறது ஞாபகத்துக்கு வரல்லை. போஸ்ட்டாபீசுக்குப் போய் ஒரு ட்ரங்கால் போட்டு எங்கிட்டத் தெரிவிச்சா ஓடிவந்திருக்க மாட்டேன்!... இப்பக்கூடக் கேள்விப்பட்டதும் மிட்டாய்க் கடை சாமண்ணாவின் அம்பாசிடரை எடுத்துக்கிட்டு ஓடி வந்திருக்கிறேன். சந்தியா! படிச்சிருந்தும் உனக்குப் பொறுப்பு உணர்வு ரொம்பக் குறைச்சல்....'' துண்டை வேகமாக உதறித் தோளில் போட்டுக் கொண்டு படபடவென்று பொரிந்து கொட்டிவிட்டு ஊஞ்சல் மீது தொப்பெனக் குமரேசன் உட்கார்ந்தார்.

அத்தை ஜகதாவுக்கு ஒரே கலவரம். வேலையிலிருந்து அலுத்துச் சலித்து வருகிறவனிடம் ஆறுதலா ஒரு வார்த்தை பேசத் தெரியாவிட்டாலும் இந்த மனிதனுக்கு அதட்டி அதிகாரம் செய்ய என்ன உரிமை?

''குமரேசா! அப்படி என் நிலைமை ஆபத்தாக இருந்தா சந்தியா உனக்குத்தான் முதல்லே ஆள் அனுப்பியிருப்பா... அவளால் ஆனமட்டும் உடனே டாக்டர் வச்சுக் கவனிச்சா. அவ இல்லாட்டி என் கதி என்ன ஆகியிருக்குமோ தெரியாது....''

''ஏன் நாங்கள் இல்லையா? நடுத்தெரு விலா விட்டுவிடுவோம்?'' — ஆங்காரமாகக் கேட்டார் குமரேசன்.

ஊஞ்சலை உந்தித் தள்ளி ஆடத் தொடங்கியவர் காதில் வாயிலில் மோட்டார் சைக்கிள் வந்து நிற்கும் ஓசை கேட்க எழுந்து எட்டிப் பார்த்தார்.

மருந்துப் பெட்டியுடன் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே வந்த அந்த வாலிபனை அவர் இதற்கு முன் பார்த்ததில்லை.

திடீரென்று அவர் மனத்துக்குள் ஓர் உறுத்தல் ஏற்பட்டது.

அத்தையம்மாள் காலடியில் சுருண்டு கொண்டு கிடந்த ஸாம்ஸன் ஒரே துள்ளலாய்ப் பாய்ந்து உற்சாகத்துடன் முன் பக்கத்துக்கு விரைவதைக் கண்டார். முன்னங்கால்கள் இரண்டையும் தூக்கிக் கொண்டு வாலை ஆட்டியபடி அவன் மேல் அது விழுந்ததைக் காண அவருக்கு அதிசயமாக இருந்தது. கொஞ்சமும் அஞ்சாது அவன் அதன் முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டுச் சிரித்துக் கொண்டே அது பின்தொடர, உள்ளே வருவதைக் காண அவருக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

'இவன்தான் இந்தக் கிராமத்தில் கிளினிக் திறந்திருக்கும் புது டாக்டரா?'

மேலே விழுந்து பிடுங்கிவிடும் பொல்லாத ஸாம்ஸனைத் தாஜா பண்ணிச் சிநேகிதம் செய்து கொண்டிருக்கிறானே!

அடுத்தபடியாக இவன் வீட்டுப் பெண்களிடம் தன் சாகசத்தைக் காட்டி, மயக்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்?



குமரேசன் மூளை கவலையில் விருவிருத்தது.

''காலையில் எனக்கு ஒரு அவசரக் கேஸ் வந்து விட்டது. அடுத்த கிராமத்துக்குப் போக வேண்டியிருந்ததாலே வரமுடியலை. மன்னிச்சுக்கோங்க... அநேகமாகக் காயம் ஆறிப்போயிருக்கும்னு நினைக்கிறேன். இப்ப காயத்திலே வலி எப்படி இருக்கு?'' கேட்டவண்ணம் மருந்துப் பெட்டியை அருகில் இருந்த முக்காலி மீது வைத்து விட்டு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த குமரேசனுக்கு வணக்கம் தெரிவித்தான்.

அவர் பதிலுக்கு வணக்கத்தை முனகி விட்டு கோபத்துடன் ஜகதாவை முறைத்தார்.

''தேவலை. காயம் ஆறிட்டதுன்னு நினைக்கிறேன். நீங்க பார்த்துச் சொன்னாச் சரி.'' என்று கூறிவிட்டு நாற்காலியில் அமர்ந்தான்.

மௌனமாக அவன் தன் வேலையைக் கவனித்தான். ஸ்டூல் மீது காலைத் தூக்கி வைத்து அழுக்காகி விட்ட துணிக் கட்டை அவிழ்த்து சுருட்டி ஒரு பக்கம் வைத்தான். பிளாஸ்திரியை மெல்ல நீக்கி காயத்தைப் பார்த்தவன் முகத்தில் புன்னகை படர்ந்தது.

''நல்லாவே காய்ஞ்சு போச்சு. இனி கட்டு தேவையில்லை. மறுபடி ஒரு பிளாஸ்திரியைக் காயத்தின் வாய் மீது ஒட்டி வச்சுடறேன். தண்ணியில் கால் வைக்காமல் இன்னும் ஒரு வாரம் காப்பாத்தினீங்கன்னா சரியாயிடும். நல்லாக் காய்ஞ்ச பிறகு நீங்களே பிளாஸ்திரியை எடுத்துத் தூரப் போட்டுடலாம். நான் இனி வரத் தேவையில்லை'' என்று சொல்லிக் கொண்டு தன் வேலையை வேகமாக முடித்தான். பழைய நாளேட்டின் ஒரு ஏட்டை எடுத்து வரச் சொல்லி அதில் கட்டுத் துணி, அழுக்கான பிளாஸ்திரித் துண்டுகள் இவற்றைப் போட்டுச் சுருட்டி பின் பக்கமிருந்த குப்பைத் தொட்டியில் வீசிவிட்டு வந்தான்.

சந்தியா தயாராக முற்றத்துக் குறட்டில் வைத்திருந்த சோப்புத் துண்டில் கையைத் தேய்த்துச் செம்புத் தண்ணீரைத் தானே வார்த்துக் கொண்டு கையைக் கழுவிக் கொண்டான்.

அதற்குள் சந்தியா காப்பியைக் கலந்து இருவருக்கும் எடுத்து வந்தாள்.

முதலில் அத்தான் குமரேசனுக்கு அருகே ஊஞ்சல் மீது டம்ளரை வைத்துவிட்டு முக்காலி அருகே தரை மீது அவனுக்குக் கொண்டு வந்து வைத்தாள்.

''இதெல்லாம் எதுக்கு?... நன்றி'' என்று கூறிக்கொண்டு தயக்கமாகக் காப்பியைப் பருகியவன் கண்கள் சந்தியாவைப் பார்ப்பதைக் குமரேசன் கவனித்தார். அவருள் ஆத்திரம் எரிமலையாக மூண்டது.

''டாக்டர்! இவர்தான் எங்க வீட்டு மூத்த மாப்பிள்ளை. சந்தியாவின் அக்கா புருஷன் குமரேசன். கேள்விப்பட்டதும் கவலையோட திருச்சியிலிருந்து ஓடி வந்திருக்கிறார். காயம் நல்லாயிடுச்சுன்னு தைரியம் சொல்லுங்க... பாவம் ரொம்பப் பயந்து போயிருக்கார்''—தொடர்ந்து கூடத்தில் நிலவிய அந்த அழுத்தமான அமைதியைக் கலைத்தாள், அத்தை ஜகதா.

''அப்படியா? உங்களைச் சந்தித்தது பற்றி ரொம்ப மகிழ்ச்சி. காயம் நல்லாவே ஆறிப்போச்சு. தடுப்பு ஊசி எல்லாம் போட்டுக் கவனிச்சிருப்பதாலே இனி பயப்படறதுக்கு ஒண்ணுமில்லே.'' என்று கூறி விட்டு மீதிக் காப்பியை இரண்டே வாயாகப் பருகிவிட்டு, அருகில் உராய்ந்தபடி நின்று வாலாட்டிய ஸாம்சனை வருடிக்கொடுத்து விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான்.

வாயில்வரை சந்தியா அவனைப் ,பின் தொடர்ந்து சென்றதைக் கண்ட குமரேசன் கண்களில் கடுமை தெரிந்தது.

கேட்டைச் சாத்திவிட்டு ஸாம்சனை இழுத்துக்கொண்டு உள்ளே வந்தவளிடம் ஏளனமாகக் கேட்டார்.

''வந்தவனுக்கு வழி தெரியாதா? கல்லுப் புள்ளையாராட்டம் நான் ஒருத்தன் இருக்கச்சே வாசல்வரை நீ போய் வழி அனுப்பணுமா?''

வேலை கெட்ட வேளையில் அவர்களைப் பார்க்கப் புறப்பட்டு வந்துவிட்டிருந்த அத்தான் குமரேசன் வீணாக ஒரு கலவரத்தை ஆரம்பிக்கிறார் என்று சந்தியாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''அவருக்கு வழி தெரியும். ஆனால் அவருக்கு என்ன பீஸ் தரதுன்னு இன்னும் முடிவாகவில்லை. அதைக் கேட்டேன். பில்லை இன்னும் இரண்டு நாளில் அனுப்பறேன்னார். அவ்வளவுதான் விஷயம்'' என்று வெடித்தாள்.

குமரேசன் நாக்கைக் கடித்துக் கொண்டார். சந்தியா அவளது சகோதரிகளில் மிகவும் வித்தியாசமானவள். படித்திருக்கிறோம், வேலை பார்க்கிறோம் என்ற தெம்பிலே கொஞ்சம் வெடுக்கென்று பதில் சொல்லும் துடுக்குத்தனம் உடையவள். அவர் வந்த காரியம் வெற்றி பெற வேண்டுமானால் அவளிடம் கொஞ்சம் தணிந்து பேசித் தொலைப்பதுதான் வழி....

''அதுக்கில்லே சந்தியா... நீ வயசுப் பொண்ணு... அந்த டாக்டர் ஒரு வாலிபன். அதனாலே யாராச்சும் பார்த்தா ஏதாவது கதை கட்டிபிட்டா...''

''அத்தான்! அப்படிப் பார்த்தா நான் தினமும் ஏறிப் போற பஸ்ஸிலே வேலை பார்க்கிற கண்டக்டர் ஒரு வயசுப் பையன்தான். வாத்யாரம்மா வந்துட்டீங்களான்னு சிரிச்சுக்கிட்டு டிக்கட்டைக் கொடுக்கிறான். அதை ஓட்டுகிறவரும் ஒரு வாலிபர்தான். என்னை நிலையத்தில் பார்த்ததுமே புன்னகையுடன் வண்டியை நிறுத்தறார். எங்க பள்ளிக்கூடத்திலே தலைமைக் கணக்கரா வேலை பார்க்கிறவர் ஒரு இளைஞர்தான். ஏன் நம்ப தோட்டத்தைக் கொத்தி உதவற மாரப்பன்கூட வயசுப் பையன்தான். ஒரு ஆம்பளையோட ஒரு பெண் பேசினாப் போச்சுன்னு நினைக்க ஆரம்பிச்சா இந்தக் காலத்து வாழ்க்கைக்கு கட்டுபடியாகுமா?.. நம்ப கிராமத்து ஜனங்க விவரம் தெரிஞ்சவங்க. நானும் அத்தையும் கௌரவமாக அப்பாவுக்குப் பிறகு இங்கே வாழ்ந்துக்கிட்டு இருக்கிறது பற்றி அவங்களுக்கு நல்லாவே தெரியும். மட்டித்தனமா எதுவும் பேச மாட்டாங்க...''

''அப்பாடி! உன்னோட வாய் கொடுத்து நான் சமாளிக்க முடியுமா? நீ உன் பள்ளிக்கூடத்து விழாக்களிலே மேடை ஏறிப் பேசறவளாச்சே... அது கிடக்கட்டும் இப்படி உட்காரு... உன்கிட்ட ஒரு சங்கதி பேசணும்'' தணிவான குரலில் ஆரம்பித்தார்.

ஸாம்சனை அருகில் படுக்க வைத்துக் கொண்டு குறட்டோரத்தில் கோபத்தை அடக்கிக் கொண்டு உட்கார்ந்தாள் சந்தியா.

''நம்ம வீட்டுக்குப் பழக்க மில்லாத புது டாக்டரை ஏன் கூப்பிட்டனுப்பினே? அவன் ஒரு பெரிய பில்லை அனுப்பினா உனக்கு கட்டுப்படியாகுமா? நம்ம செந்தில் நாதனுக்கு நம்ப நிலைமை தெரியும். கூடக் குறைய வாங்கிப்பார். இல்லையா?'' குழைவாகக் கேட்டார்.

''சமயத்துக்கு இவர்தான் கிடைச்சார். ஆபத்துக்கு உதவி கேட்டோம். கொடுத்தார். இப்போ அவர் அனுப்பப் போற பில்லைப் பார்த்துப் பயந்தால் முடியுமா? ஒரே மூச்சில் பணம் கட்ட முடியாட்டி பகுதி பகுதியாக் கட்டி முடிச்சாப் போகுது. தலையா போயிடும்?'' அசட்டையாகப் பதில் அளித்தாள் சந்தியா.

''கோபப்படாமக் கொஞ்சம் நிதானமா கேட்டுக்கோ சந்தியா. அன்னிக்கு நான் அனுப்பின வரன் வீட்டவங்களை நீயும் அத்தையுமா விரட்டி அனுப்பிட்டீங்க. சரி விட்டுத் தள்ளு. இப்போ என்கிட்ட அயனான இடம் ஒண்ணு அகப்பட்டிருக்கு. அத்தையம்மாளைப் பார்த்துட்டு அப்படியே இதைப்

பத்தியும் சொல்லிப்புட்டுப் போகத்தான் வந்தேன்.''

தாடை இறுக சந்தியா குமரேசனை வெறித்தாள்.

''டவுனிலே கடைத் தெருவில் ஒரு பெரிய புத்தகக் கடை வச்சிருக்கார், எனக்கு ரொம்ப வேண்டியவர் கூட. எக்ஸ்டென்ஷனிலே பெரிய பங்களா இருக்கு. கார் ஆள் படைன்னு அமர்க்களமா வாழ்கிறவர். ரொம்ப சௌகர்யமான இடம். வரதக்ஷிணை சல்லிக் காசுகூடச் செலவழிக்க வேண்டாம். நகைகள் கூட ஏதும் வேண்டாம். அவரே ஏராளம் போட முடியும். கோயில்லே வச்சு எளிமையாக் கல்யாணத்தை நடத்திக் கொடுத்தாப் போதும்... இந்த வரனுக்கு என்ன சொல்றே?''

''இந்தக் காலத்தில் அப்படி ஒரு வரன் சுலபமாக் கிடைச்சா மறுப்புச் சொல்ல என்ன இருக்கு? பையனுக்கு என்ன வயசு? என்ன படிச்சிருக்கான்?''

அத்தை கேட்டதும் ஆவேசம் வந்தவர் போலக் குமரேசன் எழுந்தார். ''நிழல்லே உட்கார்ந்துகிட்டு விவரம் கேட்க மாட்டீங்களா நீங்க... இந்த வரனுக்காக நான் அலேஞ்சு திரிஞ்சது எனக்கல்லவா தெரியும்? வரனுக்கு வயசு நாற்பத்தெட்டாகுது. ஆம்பிள்ளைக்கு ஐம்பது வயசுகூட ஒரு வயசில்லே. பார்த்தா முப்பதுன்னு சொல்லும் இளமை. முதல் சம்சாரம் இறந்துபோய் நாலு வருஷமாச்சு. மூத்த மகனுக்கும் மகளுக்கும் கல்யாணமாகி விட்டது. வீட்டிலே பிளஸ் டு படிக்கிற ஒரு பையனும் காலேஜ் படிக்கிற சிறு பெண் குழந்தையும் இருக்கு. அதுகளைப் பார்த்துக்கிட்டுக் குடும்பத்தைக் கவனிக்கணும்.... நல்ல அறிவாளியான.. படிச்ச பெண்ணைத் தேடிக்கிட்டிருக்கார்.''

''இத்தனை வயசு வித்தியாசத்திலே வக்கப்பட சந்தியா ஒப்புக்கொள்ள மாட்டா. மேலும் இரண்டாந்தாரமா கட்டிக்க இஷ்டப்பட மாட்டா.'' அத்தை இடைமறித்தாள்.

''வரதட்சிணை குடுக்க மாட்டேன்னு வயசு மாப்பிள்ளை கிடைப்பானா?'' — ஆத்திரத்துடன் கத்தினார் குமரேசன்.

அதற்கு மேல் சந்தியாவுக்குப் பேசாமல் இருக்க முடியவில்லை.

''வரதட்சிணை கொடுத்து ஒரு வாலிபனை விலைக்கு வாங்கி நான் கட்டிக்கப் போறதில்லே. — கிடைக்கலேன்னு நீங்க சொல்றபடி எனக்குப் பிடிக்காத பாழும் கிணற்றிலே விழப் போறதில்லே.... எனக்குக் கல்யாணம் வேண்டாம்னு சொல்லியாச்சே... ஏன் என்னை இப்படி வதைக்கிறீங்க...'' அதற்கு மேல் தானாது குமுறி அழுதுகொண்டு அவள் குளியலறைக்குள் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

குமரேசன் கோபத்துடன் விடை பெற்றுக் கொண்டு கிளம்பியதும் அத்தை கதவை அடைத்துக் கொண்டு வந்தாள்.

'இந்தப் பாவிப் பயல் தனியாக இருக்கும் பெண்களிடம் அடிக்கடி வந்து ஏன் இப்படி வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கணுமோ தெரியலே.' — துயரத்துடன் புலம்பினாள்.

(தொடரும்)

---

● அவன்: ''உங்க மனைவி ரொம்ப ரிசர்வ்ட் டைப்பாமே...?''

இவன்: ''ஆமாம்! எந்தப் புதுப் படம் வந்தாலும் முதல்லே ரிசர்வேஷன் செய்துக்கிட்டுத்தான் படம் பார்ப்பாள்!''

● ''ஹலோ! போலிஸ் இன்ஸ்பெக்டரா...! உடனே எங்க ஆபீஸுக்கு வாங்க... எங்க ஆபீஸில் டைம் பாம் வெடிக்கப் போகுதுன்னு சற்றுமுன்போன்வந்தது!''

''ஸாரி, இப்ப வர்றதுக்கில்லே! போலீஸ் ஸ்டேஷனில் குண்டு வெடிக்கப் போகுதுன்னு இப்பத்தான் போன் வந்து ஸ்டேஷனையே அலசிக்கிட்டிருக்கோம்!''

● அவன்: ''பெருந்தன்மையின் உறைவிடம் என் மனைவி!''

இவன்: ''அப்படியா...?''

அவன்: ''ஆமாம்! நேற்று லேசா தலையை வலிக்கிற மாதிரி இருக்குன்னு சொன்னேன்... இன்னைக்கி நீங்க சமைக்க வேண்டாம்! ஹோட்டலுக்குப் போய் எடுப்புச் சாப்பாடு மட்டும் எடுத்துட்டு வந்துடுங்க போதும் னுட்டா!''



## உதிர்க்கிறார் ஒ. ராஜாஜி!

ஆறுவது டெஸ்ட்:

# இலக்கியத்தை மறந்த இலக்கணம்!

இங்கிலாந்துடன் இறுதி டெஸ்ட் மாட்ச் நடந்த கான்பூர் கிரீன்பார்க், குண்டப்பா விசுவநாத்துக்குப் பிடித்தமான மைதானம். இங்குதான் 1969ல் அவர் டெஸ்ட் பிரவேசம் செய்து ஆஸ்திரேலியாவுக்கு எதிராக ரத்தினமான ஒரு செஞ்சுரி போட்டார். இங்கேதான் நாலு ஆண்டுகளுக்குப் பிறகு இங்கிலாந்துக்கு எதிராக ஆடும்போது டெஸ்டின் கடைசி நாள் அன்று 75 நாட் அவுட்டாக விளங்கி, இந்தியா தோல்வியைத் தழுவாமல் காத்தார். மீண்டும் மேற்கிந்தியருக்கு எதிராக 1979 தொடக்கத்தில் 175 ரன்கள் குவித்தார். மறுபடி இப்போது அவர் அனைவரும் மனம் மகிழ ஆடி 74 எடுத்தார்.

மழை பெய்து பாழான இந்த மாட்சில் ரசிகர்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை விசுவநாத்தின் கலைத் திறனும் அதைத் தொடர்ந்து கபில்தேவின் சாகச செஞ்சுரியும் ஈடுகட்டின. இவற்றை அடுத்து கிரகாம் கூச் (58), கோவர் (85), போதம்* (142), கவாஸ்கர் (52) வெங்சர்க்கார் (46) ஆகியோரின் பாட்டிங் மன நிறைவு தந்தன. டெஸ்ட் தொடரை வெற்றி தோல்வி இன்றி முடிக்க வேண்டுமெனில் ஃபிளெட்சர் இந்த இறுதி மாட்சில் வெற்றி பெற்றே ஆக வேண்டும் என்ற நிலை. அதற்காகத் தாம் பாடுபடப் போவதை அவர் கூச்சின் விறுவிறுப்பான ஆட்டத்தின் மூலம் வெளிப்படுத்தவும் செய்தார். ஆனால் மழை வந்து அவர் திட்டத்தை தகர்த்து விட்டது.

இந்த மாட்சும் டிரா ஆக, கவாஸ்கர் தலைமையில் இந்திய அணி 1-0 என்ற விகிதத்தில் டெஸ்ட் தொடரை வென்றது. இந்தியன் ஒவ்வொருவனும் மகிழ்ந்தான்.

ஆனால் மெய்யான கிரிக்கெட் அன்பர்கள், பம்பாயில் எடுத்த எடுப்பிலேயே கவாஸ்கர் பெற்ற வெற்றி இந்தத் தொடரின் சுவாரஸ்யத்தைக் குறைத்து விட்டதை உணர்வார்கள். பம்பாய் வெற்றி கவாஸ்கருக்கு அனுகூலமாகப் போய்விட்டதால் அடுத்த மேட்சுகளில் நாம் வெற்றி பெறாவிட்டாலும் பாதகமில்லை; இங்கிலாந்து வெற்றி பெறாமல் இருந்து விட்டாலே போதும் என்ற எண்ணம் மேலோங்கி விட்டது. மந்தமான பிட்சுகளும், ஒவ்வொரு ஓவரும் முடிய நீண்ட நேரம் ஆனதும் அவரது திட்டத்துக்கு அனுசரணையாகவே இருந்தன. எனவே அடுத்தடுத்த மாட்சுகள் டிரா ஆனதில் வியப்பில்லை.

ஃபிளெட்சர் குழுவினருக்கோ பம்பாயில் ஏற்பட்ட தோல்வி சிம்ம சொப்பனமாய் விளங்கி மிரட்டியது. அதிலிருந்து அவர்கள் மீளவே இல்லை. இன்னொரு தோல்வி ஏற்படாமல் இருந்தாலே போதும் என்று கருதுவோர் போல் நடந்து கொண்டார்கள். கல்கத்தா டெஸ்ட்டின்போது வெற்றிக்குஇருந்த சிறிதளவு வாய்ப்பையும் வெளிச்சப் பற்றாக்குறை அழித்து விட்டது.

வெற்றிக்கு ஆசைப்படும் ஒரு காப்டன் தோல்வி என்ற ஆபத்துக்கு துணிய வேண்டும். ஆனால் ஃபிளெட்சர் இதற்குத் தயாராக இல்லை. தோல்வியைத் தழுவாமல் பத்திரமான நிலையில் இருந்து ஆடுவதையே விரும்பினார். இதுதான் கடைசி சந்தர்ப்பம் என்ற கட்டத்தில் கான்பூர் டெஸ்ட்டில் அவர் ஒரு கை பார்க்கத் தீர்மானித்தபோது வருணன் அவரை ஏமாற்றி விட்டான்.

''ஆகா! காப்டன்களாகிய நீங்கள் இருவரும் கிரிக்கெட் இலக்கியத்தை மறந்து இலக்கணத்தை மட்டுமே கையாண்டு ரசிகர்களுக்கு ஏமாற்றம் அளிக்கும்போது, நானும் உங்களுக்கு ஏமாற்றம் அளிப்பதில் என்ன தவறு?'' என்று வருணன் கேட்டுச் சிரிப்பது போலிருந்தது.

தமிழாக்கம்: குட்டி கிருஷ்ணன்

புகைப்படம் நன்றி: எக்ஸ்பிரஸ்

✱ போத்தம்



# முதல் குழந்தையா...
# இன்பம் இன்பம்...




**ஆனால் அடுத்ததும் உடனடியாக வந்துவிட்டால் துன்பம். 'இதைத் தவிர்க்க,**

அடுத்த குழந்தையின் வரவை, விரும்பும் வரையில் ஒத்திப்போட நிரோத். ஒரு நம்பகமான, சௌகரியமான கருத்தடைச் சாதனம். அரசு ஆதரவு காரணமாக மிக மலிவானது.

**நிரோத் உபயோகியுங்கள் உயர் ரக கருத்தடைச் சாதனம்**

davp 81/234

விநியோகஸ்தர்கள்: ப்ரூக் பாண்ட், லிப்டன், ஹிந்துஸ்தான் லீவர், யூனியன் கார்பைட், ஐடிபிஎல், ஸ்மித் ஸ்டேனிஸ்ட்ரீட், இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன், பாரத் பெட்ரோலியம், ஹிந்துஸ்தான் பெட்ரோலியம், அசன் மேட்ச் இண்டஸ்ட்ரீ.

● தனது கட்சியில் தனது இமேஜை வளர்த்து தானேதான் கட்சி என்று செய்து கொண்டதுடன் பம்பாயில் நடந்த கட்சி மாநாட்டில் ''இந்தியாவின் அடுத்தபிரதமர் வாஜ் பாயி'' ''இந்தியா என்ருல் வாஜ் பாயி'' போன்ற கோஷங்களை அனுமதித்து, சந்தோஷப்பட்டு, நியாயப்படுத்திய வாஜ்பாயி 'தனியொருவரை நம்பி நாடு இல்லை' என்று கூறுவது நல்ல வேடிக்கைதான்!
சென்னை-61 விஜி. நேசன்

● கல்கி எங்கே பாரதீய ஜனதாவை நோக்கிச் சென்று விடுமோ என அஞ்சுகிறேன்.
மேலகிருஷ்ணன்புதூர் ஆர்.கே.லிங்கேசன்

● திரு. வாஜ்பாயி அவர்களின் பேட்டி கண்டேன். தெளிவான, குழப்பமில்லாத, உறுதியான அவரின் பதில்கள் எனக்கு அவர் மீது ஒரு பிடிப்பை ஏற்படுத்தின. எல்லாக் கேள்விகளுக்கும் பொறுப்புணர்ச்சியுடன் பதில் அளித்திருக்கிருர்.
முத்துப்பேட்டை ந. வி. விஜயபாரதி

● தண்டவாள இணைப்புக் கட்டைக்குப் பதிலாக மனிதனைப் போட்டு, அதன் மீது ரயில் வரும் கார்ட்டூன் எத்தனை அர்த்தமுள்ளது தெரியுமா? இன்றைய 'ரயில் அரக்கனின்' செயலை வெட்ட வெளிச்சமாக்கிவிட்டது.
கண்ணம்பாளையம் பொன். ஜெயசிங்

● பல்வேறு விளையாட்டு விமர்சகர்களுக்கும் இடமளிக்கும் 'கல்கி' உலக சாம்பியன் பெரைராவின் அடக்கத்தைக் கண்டு வியந்திருப்பதில் ஆச்சரியமில்லை. மேலும் ஒரு சின்னச் செய்தி. சமீபத்தில் கல்கத்தாவில் நடந்த பிலியர்ட்ஸ் போட்டியில் உலக சாம்பியனுகப் பட்டம் பெற்று பம்பாய் திரும்பும்போது விமான நிலையத்தில் பெரைராவை வரவேற்கக் காத்திருந்தவர்கள் நூற்றுக் கணக்கில் இருந்திருப்பார்கள் என்று நீங்கள் கருதினல் அது தவறு. அவருடைய தாயும் தந்தையும் ஆக இரண்டே பேர்கள் தான் வரவேற்க வந்திருந்தனர் என்று 'வீக் என்ட்' வருத்தத்துடன் எழுதியிருந்தது.
பெங்களூர் அ. குமார்

● வீட்டு வேலை செய்ய வரும் பெண்களைத் தன்வயப்படுத்தும் வீட்டு ஆண்களுக்கு விஜயாலயனின் 'நம்பக்கூடாது இந்த வேலைக்காரிகளை' என்ற கதை ஒரு சாட்டையடி.
பெருங்களத்தூர் கோடீஸ்வரன்

● அபர்ணு நாயுடு துப்பறியும் துறையில் பணிபுரிந்தவரா? ''ஹிட்ச்காக் படம்'' போல மனுஷன் வெகு திரில்லாகக் கதையைக் கொண்டு போகிருரே! கான் கார்ட்டுக்கு இணையாக படக் கதை விறுவிறுப்பாக இருப்பதில் ஓவியர் ராமுவுக்கும் பங்குண்டு. கீப் இட் அப்....
அந்தணப்பேட்டை அண்ணு அன்பழகன்

● ''இரட்டை மனிதன்'' திரைப்பட விமர்சனத்தில் எஸ். எஸ். இராஜேந்திரன்



# வட்ட மேஜை

தெள்ளு தமிழ் பேசி நடிக்கிருர் என்று கொஞ்சம் இளக்காரமாகக் குறிப்பிட்டிருக்கிறது. ரஜினிகாந்த், பிரதாப் போத்தன், ராதிகா, 'ள'கரத்தை 'ல'கரமாக உச்சரிக்கும் பாடகர் ஜெயச்சந்திரன் வகையருக்களின் 'கொளந்தைத் தமில்' தமிழ்ப் படங்களை ஆக்கிரமித்திருக்கும் இத்தருணத்தில் சுத்தமான உச்சரிப்பு கேலிக்குரியதாகப் போனதில் வியப்பில்லைதான்!
சென்னை-24 ராமாபுரம் சந்துரு

● கடந்த சில வாரங்களாக கல்கியின் தலையங்கம் ஒவ்வொன்றும் ஒரு விரக்தியின் விளிம்பில் இருந்தே மலர்ந்து வருவதை நான் உணர்கிறேன். நாட்டுப் பற்றே இல்லாத வறண்ட நெஞ்சில் கூட தங்களின் உணர்ச்சிபூர்வமான கருத்துக்கள் ஓர் ஊற்றுப் பெருக்கினை ஒரு துளி அளவாவது ஏற்படுத்தும் என்பதில் என்போன்றவர்களுக்கு மிகுந்த நம்பிக்கை இருக்கிறது.
வீரபாண்டி. வநிலே அன்புச்செல்வன்

● திருத்தலம் கண்டேன் பகுதியில், பாகனேரி கோவில் கோபுரத்தில் காந்தி, விவேகானந்தர் உருவங்கள் இருப்பதாகவும் வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை என்றும் குறிப்பிட்டுள்ளது.

பொள்ளாச்சியில் உள்ள மாரியம்மன் கோவில் கோபுரத்தில் மகாத்மா காந்தி, புத்தர், இராமகிருஷ்ணர் சிலைகள் இடம் பெற்றுள்ளன. மேலும் இந்தக் கோவிலின் நுழை வாயிலில் இரு பக்கங்களிலும் மகாத்மா காந்தி உட்கார்ந்திருப்பது போலவும், உலக உருண்டையின் இந்தியப் பகுதியின் மேல் பாரத மாதா தேசியக் கொடியுடன் நிற்பது போலவும் கல்லில் வடிவம் அமைக்கப்பட்டுள்ளது.
மின்பாறை வெ. சியாமளா ரமணி

[வேறு சில ஊர்களிலிருந்தும் இதுபோன்ற கடிதங்கள் வந்துள்ளன. -ஆர்]







✕ மானேஜிங் டைரக்டர் திரு சி. கே. பின்லேயும், மனைவியும்

✕ திரு ஆதி லட்சுமணன் கடந்த 33 ஆண்டுகளாக காட்பரியில் பணியாற்றி வருகிறார். பம்பாய்த் தமிழ்ச் சங்கத்துடன் 34 ஆண்டுகளாகத் தொடர்பு உடையவர். அதன் தலைவராக ஆறு ஆண்டுகள் பணியாற்றி, தற்போது அதன் காவலர் குழுவின் தலைவராக இருக்கிறார்.

# தித்திக்கும் திருவிழா



✕ உயரம் தாண்டல்



✕ சட்டி எறிதல்

**கா**ட்பரி இந்தியா லிமிடெட் ஒவ்வொரு வருடமும் சென்னை, டில்லி, பம்பாய், கல்கத்தாவிலுள்ள பள்ளிக்கூட மாணவ மாணவிகளுக்காக இந்த நான்கு நகரங்களில் தனித் தனியாக விளையாட்டுப் போட்டிகளை நடத்துகிறது. இந்தப் போட்டிகளில் வெற்றிபெற்றவர்களுக்கு இடையே இறுதிப் போட்டி. இத்தனை ஆண்டுகளாக டில்லியில் நடைபெற்று வந்தது. ஆனால் இந்த வருடத்தில் இறுதிப் போட்டி இம்மாதம் 6, 7 தேதிகளில் சென்னையில் கோலாகலமாக நடைபெற்றது. சுமார் 239 மாணவ மாணவிகள் 42 போட்டிகளில் பங்கேற்றனர். மகிழ்ச்சியுடன் துள்ளி திரிந்த இவர்கள் இப்போட்டியை ஒருதிருவிழாவாகவே மாற்றினர்.

போட்டியில் சென்னை நகரம் 146 பாயிண்டுகள் எடுத்து சுழல் கேடயத்தைக் கைப்பற்றியது. கல்கத்தா இரண்டாவது இடத்தைப் பெற்றது. இப்போட்டியில் சில பழைய ரிகார்டுகள் முறியடிக்கப்பட்டன.

போட்டியின் முடிவில் திறமையுள்ள பத்து மாணவ, மாணவிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்களில் நான்கு பேர்கள் சென்னையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பெங்களூர் தேசிய விளையாட்டுக் கழகம், வரும் கோடை விடுமுறையில் நடத்தவிருக்கும் பயிற்சி முகாமில் சுமார் 4 வார காலம் தீவிரப் பயிற்சி பெறுவார்கள்.

இவ்வருடம் நடைபெற்ற போட்டிகளுக்காகவும், நடைபெற இருக்கும் பயிற்சி முகாமுக்காகவும் செலவிடப்படும் தொகை சுமார் ரூ 5 லட்சம் என்று காட்பரீஸ் பிராந்திய விற்பனை மானேஜர் • திரு எஸ். ஆதிகேசவன் தெரிவித்தார். காட்பரீஸ் நிறுவனம் தான் இயங்கும் சமுதாயத்தின் வளர்ச்சிக்கு இயன்றதைச் செய்கிறது என்றார் அவர். பள்ளி மாணவ மாணவிகளின் அறிவு வளர்ச்சிக்காக வாரம் தோறும் ரேடியோவில் ஒலிபரப்பப்படும் 'போர்ன்விடா பொது அறிவு வினா விடை நேரம்' பிரபலமான ஒரு நிகழ்ச்சி. இத்துடன் காட்பரீஸ் நிறுவனம் போர்ன்விடா பொது அறிவுப் புத்தகங்களையும் வெளியிடுகிறது.

இந்த விளையாட்டுப் போட்டிகள் எப்படி ஆரம்பிக்கப்பட்டன என்பதை விளக்கினார் காட்பரீஸ் விற்பனை பொது மேலாளர் திரு ஆதி லட்சுமணன். காட்பரியின் முன்னாள் மானேஜிங் டைரக்டர் ஒருவர் மியூனிக்கில் நடைபெற்ற ஒலிம்பிக் விளையாட்டுக்களைப் பார்க்கச் சென்றிருந்தார். அங்கு இந்திய விளையாட்டு வீரர்களின் சாதனைகள் பெருமைப்படக் கூடியதாக இல்லை. இந்த நிலைக்கு ஒரு பரிகாரம் பள்ளிக்கூட மாணவ மாணவிகளுக்கு விளையாட்டுக்களில் பங்கேற்க ஊக்கம் அளித்தலே என்று காட்பரீஸ் நிறுவனம் இந்தப் போட்டிகளைத் துவக்கியது.

விழாவுக்குத் தலைமை வகித்தார் காட்பரீஸ் மானேஜிங் டைரக்டர் திரு சி. கே. பின்லே.

திருமதி பின்லே பரிசுகளை வழங்கியது இரட்டிப்புப் பொருத்தம். திருமணமாவதற்கு முன்பு அவர் பி. பி. ஸி.யில் விளையாட்டு விமர்சகராகப் பணியாற்றி இருக்கிறார்.

— பி. எஸ். ஆர்.

# அந்தரங்கம் புரிவதில்லை...

அனுராதா ரமணன்



'இது எப்படி மறந்து போனது...'

வருஷா வருஷம் காலண்டரின் அன்றைய தேதி, கண்ணை உறுத்துமே... நெஞ்சில் சுமையாய்க் கனக்குமே...'

சியாமா ஒரு கணம் திகைத்து நின்றுவிட்டாள். கையிலெடுத்த வெற்றிலை, சுண்ணும்பின் ஸ்பரிசத்துக்காக ஏங்கித் துவள...

''வாயில போட்ட பாக்கு கரைஞ்சே போயிடுத்து. வெத்தலே மடிச்சுத் தர இத்தனே நேரமா?''

பரசு, பத்திரிகையில் பதித்த கண்களைத் திருப்பாமல் கையை மட்டும் மனைவியிடம் நீட்டுகிருன்.

''ஆங்...இதோ தரேன்...''

சியாமா அவசரமாய் இரண்டு வெற்றிலைகளில் சுண்ணும்பைத் தடவி, அவனிடம் நீட்டிவிட்டு, மீண்டும் பத்திரிகையில் அந்தப் புகைப்படம் வெளியாகியிருந்த பகுதியையே வெறித்துப் பார்க்க...

''என்ன, இருபது பர்ஸெண்ட் தள்ளுபடியா... 'கோ ஆப்டெக்ஸா'... போகலாம். சாயந்திரம் அம்மா, அருணு, விவேக் எல்லாரையும் அழைச்சுண்டு போகலாம்.''

பரசு பேப்பரை டீபாயின் மீது விசிறிவிட்டு ஆபீசுக்குக் கிளம்பி விட்டான். அவனே வாசல்வரையில் வழியனுப்பி விட்டு வந்த சியாமா பேப்பரை எடுத்து, மறுபடியும் அந்தப் புகைப்படத்தைப் பார்க்க – விழி 'குப்'பெனக் கண்ணீர் திரையிடுகிறது.

'இதே போட்டோதான்.'

'அஞ்சு வருஷமா இதே போட்டோதான்'

'முதல் முதல்லே அப்பா கிட்ட கிச்சாமி மாமா கொடுத்ததும் இதே போட்டோதான்.'

நேற்று நடந்தாற் போல் இருக்கிறது. சியாமாவின் அப்பாவும், கிச்சாமியும் கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்து இந்தப் புகைப்படத்தை வைத்துக் கொண்டு அக்கு அக்காய் அலசியது....

''ஏண்டா கிச்சாமி, பாஸ்போர்ட் சைஸ் போட்டோவைக் கொண்டு வந்து தரயே... பையன் உசரமா, குட்டையா நம்ம சியாமாவோட உசரத்துக்குச் சரிப்பட்டு வருமா... இதெல்லாம் எப்படிடா தெரியும்?''

''ஃபுல் சைஸ்லே மாத்திரம் இதெல்லாம் கரெக்டா தெரியுமா? பையன் வாட்டசாட்டமா இருப்பான். ஆறடிக்குத் துளிதான் குறைச்சல். முகத்தைப் பாருங்கோ.. 'ஜம்'முனு என்ன ராஜ களை!''

''சரிதாண்டா... நெத்தி ஓவர் அகலமோ? எப்ப எடுத்த போட்டோ இது... எதுக்குக் கேக்கறேன்னு, ஒரு பிள்ளை பிறக்கறதுக்குள்ளேயே வழுக்கை விழுந்துடப்போறது!''

''இந்தக் கிண்டல்தானே வேண்டாம்கறது... பையன் தலே வாரிண்டிருக்கிற வாகு அப்படி. அகல நெத்தி, அறிவு விசாலத்தைக் காட்டும்னு சொல்லுவா.''

''என்னமோ சொல்லு... ஆயிரம் பொய்யைச் சொல்லி முடி போடறதுதானே உன் வேலே!''

அப்பா சிரித்தார். கூடவே கிச்சாமியும் சிரித்தான். வாயில் அடக்கியிருந்த வெற்றிலேச் சாறு வழிந்து விடாதபடி, முகத்தைச் சற்று உயர்த்தி வைத்துக் கொண்டு லாகவமாய்ச் சிரித்தான்.

''இதோ பாருங்கோண்ணு. மத்த இடத்துல நான் ஆயிரமென்ன, லட்சம் பொய் கூடச் சொல்லுவேனுயிருக்கும். நம்ம வீட்டுல, குழந்தை சியாமா கல்யாண விவகாரத்துல விளேயாட்டுக்குக் கூடப் பொய் சொல்ல மாட்டேன்.''

கிச்சாமி சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை. சியாமாவுக்காக அவன் ஒரு ராஜகுமாரனேத்தான் தேடிப் பிடித்து அழைத்து வந்தான். பெயர்கூட ராஜாராமன்தான்.

''கையிலே ஒரு வில்லேயும் 'அம்பையும் கொடுத்து நிறுத்தி வச்சா சாட்சாத் ரவிவர்மா வரைஞ்ச ராஜாராமன் மாதிரியே இருக்கும்.''

மாப்பிள்ளையைப் பார்த்துவிட்டு அம்மா சொன்ன வாசகங்கள்.

அன்று கூடம் நிறைந்திருந்த கும்பலில், அவனே ஏறிட்டுப் பார்க்க முடியாமல் சியாமா தவித்த தவிப்பு...

''சியாமா, அரிசி உளுந்து ஊறப்போடச் சொன்னேனே போட்டியோ?''

பழைய நினைவுகளில் அமிழ்ந்திருந்தவளை, மாமியாரின் குரல் உசுப்பி விட, பத்திரிகையைச் சுருட்டி அலமாரியின் மேல் தட்டில் எறிந்துவிட்டு ஓடுகிருள் சியாமா.

''ஊறப்போடுடிம்மா. இப்பவே ஊறப் போட்டாத்தான் சாயந்திரமா அரைக்க முடியும். பரசு சாப்பிட்டு முடிச்ச கையோடயே நீயும் உட்காரப்படாதோ... அவன் தட்டை எடுத்து அலம்பி வை. எச்சத் தட்டு இப்படிக் காயவேபடாது. அகமுடையானுக்கு ஆகவே ஆகாது... விவேக் டிபன்

பாக்ஸ"லே என்ன வச்சே...அவனுக்குக் கத்தரிக்காய் சாம்பாரே பிடிக்காதே.''

அடுத்த ஒரு மணி நேரத்துக்கு ஸ்யாமா ராஜாராமனின் நினைவை ஒதுக்கி வைக்க வேண்டிய நிர்ப்பந்தம்.

இருந்தாலும் தட்டின் முன் அமர்ந்து சாப்பிடுகையில் புடவையை இழுத்துச் செருகியபடி குனிந்து சாப்பிட்ட இடத்தைச் சுத்தம் செய்கையில், சமையலறைப் பாத்திரங்களை ஒழித்து வைத்து மூடுகையில்...

அத்துமீறி அவன் அவள் மனசில் வந்து பிடிவாதமாய் நின்றான்.

**''பொ**ண்ணுக்குப் பாடத் தெரியுமா?'' ராஜாராமனின் ஒன்றுவிட்ட சித்தி கேட்டாள்.

''சுமாராத் தெரியும்.'' — அப்பாவின் பதில்.

''போறும் போறும்... சுமாராத் தெரிஞ்சிருந்தாலே போறும், ரொம்பத் தெரிஞ்சிருந்தா அதை ரசிக்க எனக்கும் ஓரளவு ஞானம் வேணு மோல்லியோ... நான் சாப்பாட்டு ராமன், சங்கீத ராமனில்லே....''

ராஜாராமனின் அடங்கிய குரலில் தொனித்த அழுத்தலான கிண்டல் கூடத்தையே சிரிப்பால் அதிர வைத்தது.

அவன் பேசியதே இவ்வளவுதான். ஆனால் இந்தச் சில வார்த்தைகளே அவனது வெகுளித்தனத்துக்கும், ஹாஸ்ய ரசனைக்கும் எடுத்துக்காட்டாய்...



பெண் பார்த்துவிட்டுக் கிளம்புகையில், பெரியவர்களிடம் கைகுவித்து விடை பெற்றவன், சியாமாவைப் பார்த்துச் சிரித்தான். இலேசாய்த் தலையை ஆட்டியதாகக் கூட நினைவு.

''போய் லெட்டர் போடறோம்கற சமாச்சாரமே வேண்டாம். எங்களுக்குப் பொண்ணைப் பிடிச்சுடுத்து. ராஜாராமன் அடுத்த மாசம் அமெரிக்கா போறான். திரும்பத் தீபாவளிக்கு முன்னாடி வருவான். அப்பவே கல்யாணத்தை வச்சுப்போம். இப்ப அவன் கிளம்பறதுக்கு முன்னாடி நிச்சயதார்த்தத்தை முடிச்சுடுவோம். என்டா ராஜாராமா, என்ன சொல்றே?''

பெற்றவரின் கேள்விக்குச் சிரிப்பைப் பதிலாக அளித்துவிட்டு, காரில் ஏறியவன்தான் ராஜாராமன். வாசல் பக்கப் படுக்கை அறையின் ஒருக்களித்த ஜன்னல் வழியாக—டிரைவருக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தவனைப் பார்த்தாள் சியாமா. கார் கிளம்பும் போது – பின் சீட்டில் அமர்ந்திருந்த அம்மாவிடம் என்னவோ சொல்லத் திரும்



பியவன், ஓரக் கண்ணால் சியாமாவைப் பார்த்த மாதிரி...

பார்த்தாரோ, இல்லை தனக்குத்தான் அப்படித் தோன்றியதோ...

சமையலறை மேடையைக் கழுவி விட்டுக் கொண்டிருந்த அவளுக்குத் திடீரென்று சந்தேகம். பரபரவென போய், அவனிடம் கேட்க வேண்டும் போல...

'நீங்க கிளம்பற சமயத்துல பெட்ரூம் ஜன்னல் கிட்ட நான் நின்னுண்டிருந்ததைப் பார்த்தேளோன்னோ...'

எங்கே போய்க் கேட்பாள்... ஐந்து வருஷங்களுக்கு முன்பு இதே நாளில் விமான விபத்தில் கருகிப் போனானே... அவனை எங்கே சென்று தேட முடியும்?

எல்லாம் எத்தனை வேகமாய் நடந்துவிட்டது... அவன் வெளி நாடு செல்வதற்கு முன்பு அமர்க்களமாய்நடந்த நிச்சயதார்த்தம் அம்மா—பார்த்துப் பார்த்து முந்திரிப் பருப்பில் பருப்புத் தேங்காய் பிடித்தது. அப்பா வாங்கி வந்த வெள்ளித் தட்டையும், சந்தன பேலாவையும் வைத்துக் கொண்டு தங்கை தம்பிகள் கேலி செய்தது...

''அப்பா, அத்திம்பேர் தன்னைச் சாப்பாட்டு ராமன்னு சொல்லிண்டாரே, இந்தத் தட்டுப் போறுமா?''

தீபாவளியை அடுத்த இரண்டு நாட்களில் முகூர்த்தம் இருக்க, தீபாவளிக்கு முன்னதாகவே வெளி நாட்டிலிருந்து பம்பாய் திரும்பியவனை — அங்கிருந்து சென்னைக்குப் புறப்பட்ட விமானம் — நடு வானத்தில் ராட்சதன் போல அப்படியே விழுங்கித் தொலைத்ததே....

'இதே மாதிரி ஒரு அக்டோபர் பன்னிரண்டாம் தேதிதான்... ராத்திரி எட்டு மணிக்கு அப்பாவுக்குத் தகவல் வந்தது.'

சியாமா, கடைக்குட்டி நாத்தி அருணாவின் பூனிபாரத்தில் தையல் விட்டுப்போன பகுதிகளைத் தைத்தபடி நெஞ்சுக்குள்ளே பழசை அசை போடுகிறாள்.

இரவு போன் வந்ததும், அப்பா, அம்மாவிடம் விஷயத்தைப் பதறிய குரலில் சொன்னதும்....

மானேஜர்: "நான் அதிகம் பேசமாட்டேன், விரல் அசைச்சா நீ வரணும்னு அர்த்தம்"

பியூன்: "நான் கூட அப்படித்தான் சார்! தலை அசைச்சா வரமாட்டேனு அர்த்தம் ..!"

-பார்த்திபன்



''அடியே சியாமா....''

தங்கையுடன் கேரம் விளையாடிக்கொண்டிருந்தவள் திடுக்கிட்டு எழ, மடியில் பத்திரப்படுத்தி வைத்திருந்த வெள்ளை நிறக் காய்கள் நாலா பக்கமும் சிதற....

''உஷ்! வாயை மூடு. அழுது ஊரைக் கூட்டாதே... நீ கத்தற கத்தல்லே, குழந்தை கதிகலங்கிப் போயிட்டா...''

அம்மாவை அடக்கிவிட்டு அப்பாதான் இரைந்து கத்தினார். அம்மா மேற்கொண்டு அலறாமல் வாயை இரு கைகளாலும் இறுக மூடிக்கொண்டாள். கண்கள் மாத்திரம் பதினெட்டாம் பெருக்குக் காவிரியாய்...

''அம்பிகே இது என்னடீம்மா சோதனை''

அப்பா துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு போனவர் — மறு நாள் விடிகாலைப் பொழுதில், ஏகப்பட்ட வயசானவர் போல,—காடு மேடாய்— அலைந்து திரிந்த பரதேசியைப் போல வந்து நின்றார். எதற்குமே அஞ்சாத மனிதர் — நிலைகுலைந்து உட்கார்ந்து விட்டதே சகிக்க முடியாத காட்சியாய்....

''அந்த மனுஷர் — அதான் பெத்தவர் — பினேன்லே போயிருக்கார் பிள்ளையோட உடம்பை அடையாளம் காட்ட....''

இதற்கு மேல் பேச முடியாமல் விக்கித்துப் போய் உட்கார்ந்து விட்டார் அப்பா.

சியாமா....

நாலு பேர் எதிரில் அழ முடியவில்லை. தனியே படுத்து அழுதாள். பெண் பார்க்க வந்தவனின் முகமும், சிரிப்பும், கண்களை விட்டு அகல மறுத்தது.

''நிச்சயமான பிள்ளையாண்டான் 'ஏர்-கிராஷ்'லே போயிட்டானுமே....''

—துக்கம் விசாரிக்க வந்தவர்களிடம் 'சள்' ளென்று எரிந்து விழுந்தார் அப்பா.

''அதனால இப்ப என்னய்யா குடி முழுகிப் போச்சு... என்னவோ என் வீட்டுல எழவு நடந்துட்டாப் போல — இங்கே எதுக்குத் துக்கம் விசாரிக்க வரேள்? நல்ல வேளை, என் பொண் கழுத்திலே தாலியைக் கட்டிட்டு இவன் இப்படி மோசம் பண்ணுமப் போனானேன்னு நான் திருப்திப்பட்டுக்கறேன் ஓய்... அந்த முகூர்த்தத்திலே முடியலேன்னாலும் அடுத்த முகூர்த்தத்திலேயாவது என் பொண்ணுக்குக் கல்யாணத்தைப் பண்ணி வைக்கிறேன் பாரும்....''

அப்பாவின் எரிச்சல் மிகுந்த வார்த்தைகள்தான் அந்தச் சமயத்தில் அவளை மற்றவர்கள் பிய்த்துப் பிடுங்காமல் பாதுகாத்த வேலி. ஊராரிடம் இப்படிக் கத்தியவர், நாலு சுவர்களுக்கு நடுவில் — பைத்தியம் பிடித்தவர் மாதிரி நடந்து கொண்டார்.

''என் குழந்தை இப்படியே நின்னுடுவாளோடி....'' அம்மாவின் மடியில் தலை புதைத்து 'ஓ'வென அழும் தந்தையைப் பார்த்தபடி. சுவரோடு சுவராய்... கட்டிலோடு—கட்டிலாய்... தூணோடு தூணாய்...

சியாமா அந்த நாட்களை நினைத்துப் பார்க்கிறாள்.

'என் கல்யாணத்தைப் பத்திக் கவலைப் பட்டவா யாருமே என் மனசைப் பத்தி

# வெப்பத்தால் நீங்கள் வலுவிழந்து வாடுகையில்...



உங்களுக்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-Dயின் புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளூகோன்-டி**®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளூகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது—உங்களுக்குத் தேவையான போது.

30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளூகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.




உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளூகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட—விளையாட்டிலும், வேலையிலும். க்ளூகோன்-டி— உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.



## வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு வளமூட்டிய அசல் க்ளூகோஸ் பவுடர்—*க்ளாக்ஸோ* அளிக்கிறது.

HTB-GLL-6737 TL

# பொறுப்புள்ள பெற்றோர் நீங்கள்



உங்கள் குழந்தையின்
பொன்னான எதிர்காலம் உங்கள்
கையில் மிகவும் அவசியமான
கல்விச் செல்வத்தை அவனுக்குத்
தர நீங்கள் எல்லா வழிகளிலும்
முயற்சி செய்கிறீர்கள்
முயற்சியில் கனரா பாங்க்
உங்களுக்கு உதவ முடியும்.

உங்கள் குழந்தை சிறுவனாக
இருக்கும் போதே, அவனுடைய
தேவைகள் குறைவாக இருக்கும்
போதே கனரா பாங்க்கில்
சேமிக்கத் துவங்குங்கள். அவன்
பெரியவனாக வளர்ந்து அவனது
தேவைகளும் அதிகரிக்கின்றன.
அப்போது முன் கூட்டியே
ஆலோசித்துச் சேமிக்க
ஆரம்பித்ததை எண்ணி உங்களை
நீங்களே மெச்சிக் கொள்வீர்கள்.

உங்கள் தேவைகளுக்கு ஏற்ப
கனரா பாங்க்கில் பல சேமிப்புத்
திட்டங்கள் உள்ளன. வித்யா நிதி
உங்கள் குழந்தைகளின் கல்விச்
செலவுகளுக்கு உதவுகிறது.
நிரந்தர டெபாசிட் திட்டத்தில்
சேமிக்கத் தொடங்கிய 7
வருடங்கள் கழித்து நீங்கள்
மாதந்தோறும் சேமித்த
தொகைக்குச் சமமான
தொகையை மாதந்தோறும்,
எண்ணிலாக் காலத்திற்கும்
திரும்பப் பெறலாம். அதே
நேரத்தில் உங்கள் அசல்
குறையாமல் அப்படியே
இருக்கின்றது.

இன்றே உங்கள் அருகாமையில்
உள்ள எங்கள் கிளையை
அணுகுங்கள். கனரா பாங்க்
உங்கள் பொறுப்புக்களை
மகிழ்ச்சியுடன் பகிர்ந்து
கொள்கிறது.

**கனரா**
**பாங்க்**



(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1,300 க்கும்
மேற்பட்ட கிளைகள் உள்ளன.

maa (S) CB 13 Tam c 81

அதுல நீயாக் கொதிச்சுண்டிருக்கிற அவரோட நினைப்பைப் பத்தி — புரிஞ்சுக்கவே இல்லையே...'

கையிலிருந்த அருணுவின் யூனிபாரத்தைத் தைக்க முடியாமல் அடிக்கடிகண்ணீர் இடைஞ்சலாய்த் திரை போடுகிறது. யூனிபாரத்தை அப்படியே போட்டுவிட்டுத் தங்களது படுக்கை அறைக்கு வந்து அலமாரியின் மேல் தட்டில் சுருட்டிப் போட்ட பத்திரிகையைப் பிரிக்கிறாள்.

'ஐந்து வருடங்களுக்கு முன் — இதே நாளில், எங்களைப் பிரிந்த ராஜாராமனின் ஆத்மா சாந்தி பெற....'

பத்திரிகையின் இரண்டு மூன்று இடங்களில் அவன் ஆக்கிரமித்திருந்தான். பெற்றோர், கல்லூரி சினேகிதர்கள், அலுவலக நண்பர்கள் இப்படி... பேர் பேராக அஞ்சலி செலுத்தி, அவனது மறைவினால் ஏற்பட்ட துக்கத்தைப் புதுப்பித்து, மெருகேற்றி, வரிக்கு வரி அழுது....

இந்த ஐந்து வருஷங்களில் யார் இவனை நினைவில் வைத்திருந்தார்களோ இல்லையோ. சியாமளாவின் நெஞ்சில் இவன் அடிக்கடி அலையெழுப்பியிருக்கிறான்.

நிச்சயதார்த்தத்தின்போது கொடுத்த வெள்ளித் தட்டும், சந்தனப் பேலாவும், குங்குமச் சிமிழும் அப்படியே மெருகழியாமல் திரும்பி வந்தபோது அப்பா, அவைகளைத் தீண்டத் தகாத வஸ்துக்களைப் போலப் பாவித்து அப்படியே கொண்டு போய்க் கடையில் போட்டார். புதுசாக வேறு வாங்கி வந்தார்.

'அதுபோல, அத்தனை சுலபமாய் எனக்கு இன்னொரு மாப்பிள்ளையைப் பிடிச்சுண்டு வர முடியலையே....'

ஐந்து வருஷங்களில் எத்தனை பேருக்குத் தான் குனிந்து நமஸ்கரித்திருக்கிறோம் என நினைத்துப் பார்க்கிறாள் அவள். ஒவ்வொருவனையும் வணங்கி நிமிரும்போது, பலகாரத் தட்டை எடுத்து நீட்டும்போது, பிள்ளை வீட்டவர்கள் 'பாட்டுத் தெரியுமா?' எனச் சம்பிரதாயக் கேள்வியைக் கேட்கும்போது, அவள் படுக்கை அறை ஜன்னல் வழியாகக் காரில் அமர்ந்திருப்பவனைப் பார்க்கும்போது ராஜாராமன்தான் அவள் எதிரில் வந்து நிற்பான்.

'தயவு செஞ்சு, நீங்க அந்தண்டை போங்களேன். எனக்கு ஒழுங்கா கல்யாணம் நடக்கணும். எனக்கு ஆசை இல்லேன்னாலும் ஊர்ப் பேச்சை நிறுத்தறதுக்காகவாவது என் கழுத்துல ஒரு தாலி ஏறியாகணும். இல்லேன்னா, எங்க அப்பா இந்தத் துக்கத்திலேயே செத்துடுவார். ப்ளீஸ், என்னைத் தொந்தரவு பண்ணாதீங்கோ...'

மானசிகமாக அவனிடம் கெஞ்சியிருக்கிறாள். துரத்தியிருக்கிறாள். அதே போல— வேலையில்லாத நேரங்களில் — பொழுது போகாத சமயங்களில் — என்றோ செத்துப் போனவனை, மறுபடி மறுபடி மனசுக்குள் கொண்டு வந்து நிறுத்திப் பார்த்திருக்கிறாள்.

'ப்சு... பிளேன் தரையிலே விழுந்து நொறுங்கறச்சே அவர் என்ன நினைச்சிருப்பார்.....'



எண்ணங்கள் அவளைச் சுற்றியே வட்டமிடும். பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்திருக்கும் மகளைப் பார்த்து அதட்டல் போடுவாள் பெற்றவள்.

''சும்மா உட்கார்ந்து மனசைக் கண்டபடி அலைய விடாதே சியாமா... சுவாமி விளக்கை ஏற்றி நமஸ்காரம் பண்ணிட்டு, நாலு சுலோகத்தைச் சொல்லு....''

அம்மாவுக்குத் தெரியும் சியாமாவின் தவிப்பு.

''என்னமோ வந்தான்: பார்த்தான்: போனான். அதோட அவனை மற சியாமா. அதுக்கு அப்புறம் எத்தனை பேர் உன்னைப் பெண் பார்த்துட்டு சொஜ்ஜியும் பஜ்ஜியும் தின்னுட்டு, வாய் கிழியப் பேசிட்டுப் போயிருக்கான்கள்... அவா ஒவ்வொருத்தனையும் நினைப்புலயா வச்சிண்டிருக்கோம்... அது போலத்தான் இவனும்...''

அம்மா இப்படிச் சொன்னாலும் சதா இவனையும், அன்று நடந்த நிச்சயதார்த்தத்தையும் நினைத்துக் கொண்டுதான் இருந்தாள்.

ஏன், அம்மாவுக்கு ரொம்பப் பிடித்தமான எழுத்தாளர் எழுதிய கதைப் புத்தகம் ஒன்றில் — கதாநாயகிக்கு இது போல ஒரு சம்பவம் நிகழ்ந்து விட்டதையும் அவள் பெற்றவருடன் சாவு நடந்த வீட்டுக்குப் போய், தனக்கு மணாளனாய் வரவிருந்தவனின் உடல் மீது விழுந்து அழுது, பூவையும் பொட்டையும் உதறி விட்டு வந்ததாய்— நெஞ்சைப் பிழியும்படி அவர் எழுதியிருந்ததையும் அவள் படிக்க நேர்ந்தபோது...

''அவ தைரியசாலி. அப்பாவோட அவர் வீட்டுக்குப் போய்ப்பொணத்தையாவது பாத்துட்டு வந்தா. அந்தத் தைரியம்கூடன்னு எனக்கு இல்லாமப் போச்சு....'

'போயிருக்கலாம். யார் என்ன சொல்லியிருப்பா... என்ன சொன்னாத்தான் என்ன... போய் அந்த முகத்தை ஒரு தடவை பார்த்திருக்கணும்...'

'எல்லாரும் வந்திருக்கறப்போ நான் மாத்திரம் வரலையேன்னு அவரோட ஆத்மா தவிச்சிருக்குமோ...'

'செத்ததுக்கு அப்புறம் ஆத்மாவாவது தோசை மாவாவது...'

ஒவ்வொரு வருடமும் இந்தமாதம் இந்தத் தேதி வரும்போது தனக்குள் எத்தனை விடை தெரியாத கேள்விகளை எழுப்பித் தவித்திருக்கிறாள்...

'இவரோட பிரெண்ட்ஸ் எல்லாரும் வருஷா வருஷம் பத்திரிகையிலே 'ஆபீட்சுவரி'யில இவர் போட்டோவைப் போட்டு 'இன்னமும் இவனை நாங்க மறக்கலே'ன்னு சொல்லாமச்சொல்லிக்கிறாளே... நானும் ஏன் இது மாதிரி இவர் போட்டோவைப் போட்டு நாலு வரி எழுதி என் தவிப்பைத் தீர்த்துக்கக்கூடாது?'

இப்படி எத்தனை நினைப்புக்கள் ... எத்தனை இரவு அவள் தூங்காமல் இருளை வெறித்தபடி தனக்குள் முனகியிருக்கிறாள்...

அத்தனைக்கும் ஒரு முற்றுப்புள்ளியாய்ப் பரசு வந்தான். ஏழெட்டு மாசங்களுக்கு முன்புதான் சியாமாவின் கழுத்தில் மூன்று முடிச்சுப் போட்டான்.

அவன் ராஜாராமன். இவன் பரசுராமன்.

குணத்தில்கூட பரசு — பரசுராமன்தான்.

''பொண்ணுக்கு முன்னாடியே ஒரு இடத்துல நிச்சயமாகி நின்னு போயிடுத்தாம்டா பரசு....''

பரசுவின் தாயார் முதலில் ஆட்சேபிக்கத்தான் செய்தாள்.

''அதைப் பத்தி எனக்குக் கவலையில்லே. அவனுக்கு அல்பாயுசுன்னு இவள் என்ன செய்வா. இவ மேலே ஏதாவது பிளாக் மார்க் இருக்கா — அதைப் பாரு. அதெல்லாம் ஒண்ணும் இல்லேன்னு முடி.''

'பளிச்'சென்த் தெறித்து விழுந்த வார்த்தைகள் சியாமாவை மணக் கோலத்தில் உட்கார்த்தி வைத்தன.

இன்று—

சியாமாவுக்கென ஒரு வீடு. மாமியார், மாமனார், மைத்துனர், நாத்தனார்... பகல் முழுதும் வீட்டு வேலை. இரவில் பரசுவைக் கவனித்துத் திருப்தி செய்ய வேண்டிய கடமை.

சின்னதும் பெரிசுமாய்த் தொடர்ந்து வந்த பண்டிகைகள். மாமியாரின் பின்னால், கொடுக்கு மாதிரி போர்த்திய தலைப்பும் குனிந்த தலையுமாய் புது நாட்டுப் பெண்ணாய் லட்சணமாய், வீடு வீடாய் மஞ்சள் குங்குமத்துக்கு ஏறி இறங்குவதிலும்...

மாமனாருக்குக் காப்பியைப் பதமாய் ஆற்றிக் கொடுத்துக் கொண்டே அவரின் பழைய கால வீரப் பிரதாபங்களைப் புன்னகையுடன் கேட்பதிலும்...

பதினாறு வயது நாத்தி அருணாவின் ரவிக்கைக்குக் கொக்கி வைத்து தைத்து. தாவணிகளுக்குக் கஞ்சி போட்டுக் காக்கா பிடிப்பதிலும்...

பதினாலு வயசு மைத்துனன் விவேக்கிற்கு டிபன் பாக்ஸில் சாப்பாடு கட்டிக் கொடுத்து, காற்றாடிக்கு மாஞ்சா தயார் செய்து தந்து, அவனுக்குப் புரியாத பாடங்களை மண்டையில் ஏற்றுவதிலும்...

கணவன் பரசுவுடன் சினிமாவுக்குப் போய், கடற்கரைக்குப் போய், அவனது வருணிப்பில் குளிர்ந்து, ஸ்பரிசத்தில் மயங்கி, அணைப்பில் கரைந்து, அவனது முகச் சுளிப்புக்காகக் கண் கலங்கி, அவனுடன் படுத்துச் சுகம் காண்பதிலும்...

'இந்தத் தேதியை — இந்த மாசத்தை மறந்தே விட்டேனே.. அது என்னமா மறந்தேன்....'

நெஞ்சம் முழுக்கத் தணலாய்...

மாலையில் பால்காரன் வரும் வரையில் அழுதபடி படுத்திருந்தாள் சியாமா.

''தீபாவளிக்குப் புடவை வாங்க சாயந்திரம் போகலாம்னு பரசு சொன்னானே...''

மாமியார், அறைக்குள் எட்டிப் பார்க்கிறாள்.

வெறும் தரையில் குப்புறக் கவிழ்ந்து படுத்திருந்த சியாமாவின் தோற்றம் பதற்றத்தைக் கிளப்பிவிட...

''உடம்பு என்னடிம்மா...''

''ஒண்ணுமில்லே, தலைவலி, அவ்வளவுதான்.''

சியாமளா புரண்டு படுக்கிறாள். அழுது அழுது கண்கள் இடுங்கி, முகம் வீங்கி— நிஜமாகவே உடம்பு சரியில்லாதவள் போல..

''என்னமோ, உன் புருஷன் வந்து 'கடைக்குக் கிளம்புடி'ன்னு குதிப்பான்...''

அவள் நகர, சியாமா தனக்குள் விசும்புகிறாள். 'போயும் போயும் இன்னிக்கா...'

பரசு ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாய், அருணாவும் விவேக்கும் முகத்தைத் தூக்கி வைத்தபடி புகார் சொல்ல....

---

**அவன் : ''எனக்குக் காது கேளாமல் போனதிலிருந்து ஒரே கவலையாயிருக்கு''**

**இவன்: ''ஏன்?''**

**அவன் : ''ஆபீஸிலிருந்து என்னை நீக்கி விடுவாங்களோன்னுதான்''**

**இவன் : ''பயப்படாதே! உன்னைப் 'புகார்களைக் கேட்கிற இலாகா'வுக்கு மாற்றிடுவாங்க. அவ்வளவுதான்''**

**— ஈ. சோமசுந்தரம்**



# கோத்ரெஜ்

# நரை முடி பற்றியும் ஹேர் டைகள் பற்றியும் ஏற்படும் கவலைகள் அனைத்தையும் போக்குகிறது

**ஹேருக்கு டை செய்வது செயற்கையான தோற்றமளிக்கக்கூடும்.**
ஆனால், நீங்கள் சரியான 'டை'யை தேர்ந்தெடுத்துவிட்டால் இயற்கையாகவே விளங்கும். கோத்ரெஜ் ஹேர்டை தேர்ந்தெடுத்த பொருட்களால் தயாரானது — நேர்த்தியாக டை செய்கிறது. எவராலும் வித்யாசம் காண முடியாது.

**நரை முடி 'எடுப்பான' தோற்றத்தைத் தருகிறது!**
'எடுப்பான' தோற்றம் அளிக்கக் கூடும். ஆனால், தோற்றத்தில் முதுமையையும் எடுத்துக்காட்டும். உங்கள் நண்பரையே கேட்டுப் பாருங்கள்.

**முடிக்கு டை செய்யும் தொல்லையை எவர் விரும்புவர்?**
ஒருவரும் விரும்பமாட்டார். அதனால்தான், கோத்ரெஜ் வழங்குகிறது தானாகவே பரவும் ஒரு ஹேர் டை. இனி நீங்கள் 'முடியை பகுதிகளாகப் பிரித்து சாயம் பூசும்' தொல்லைக்கு உள்ளாக வேண்டாம். இந்த டை உபயோகித்து, நுரை வரச்செய்து, சிறிது காத்திருந்து, கழுவி விடுங்கள். ஆஹா... எவ்வளவு சுலபம்.

**ஹேர் டை உபயோகிப்பதினால் முடி பாதிக்கப்படுமா?**
ஆம், பழைய முறையில் செய்யப் பட்ட சாயங்கள் பாதிக்கலாம். அதனால்தான், கோத்ரெஜ் அலாதியான ஹேர் டை தயாரித்தளிக்கின்றனர். இதில் 'ஹேர் கண்டிஷனர்' சேர்க்கப் பட்டிருப்பதால் உங்கள் முடிக்கு இளமை தோற்றத்தை அளிக்கிறது.




## கோத்ரெஜ் பர்மனென்ட் ஹேர் டை

**ஹேர் டை செய்வதிலுள்ள தொல்லையைப் போக்குகிறது; தோற்றத்தில் இளமை பூரிக்க வைக்கிறது.**

2 வண்ணங்களில்: இயற்கையான கறுப்பு, கரும் பழுப்பு. 20 மி.லி. மற்றும் 40 மி.லி.

CASGS-154-204 TAM

''பாரு அண்ணா, நீ வெளில கிளம்பலாம்னு சொல்லிட்டுப் போயிருக்கே... மன்னிக்குத் தலைவலியாம் வரமாட்டேங்கறா...''

''என்ன சியாமா.. தலைவலிதானே..... மாத்திரையைப் போட்டுக்கோ. சரியாயிடும் கிளம்பு. வெளிக் காற்று ஜில்லுனு மூஞ்சியில பட்டாலே தலை வலி பறந்துடும்.''

''இல்லே... நாளைக்குப் போகலாமே...''

''என்ன நீ, ஆரம்பிக்கறப்பவே அபசகுனம் பிடிச்சாப்பல... சட்டுப்புட்டுனு மூஞ்சிய அலம்பிண்டு கிளம்பு சொல்றேன்....''

இரைந்து சொன்ன மாமியார், மகனின் காதில் விழாதவாறு தணிந்த குரலில் இவளிடம் சொல்கிறாள்:

''சும்மா மசங்கி மசங்கி நிக்காதே. அவன் கோபம்தான் உனக்குத் தெரியுமே...''

இதற்கு மேல் பேச வழியில்லை சியாமாவுக்கு.

பரசுவின் கோபம் பிரசித்தமானது.

''என்ன....கிளம்பியாச்சா?''

பரசுவின் ஓங்கிய குரல்.

உதட்டைக் கடித்து, அழுகையைச் சிரமப்பட்டு அடக்கியபடி கிளம்புகிறாள் அவள். குடும்பமே உல்லாசமாய்க் கிளம்ப அவள் மட்டும் மௌனமாய்.....

பரசுவின் பேச்சிலோ, அருணாவின் சிணுங்கலிலோ விவேக்கின் சிரிப்பிலோ ஒட்டாத நிலை....

''இந்தப் புடவை பிடிச்சிருக்கா...''

''உம்...''

''அந்த நீலம்....''

''உம்....''

''எல்லாத்துக்கும் 'உம்' கொட்டினா என்ன அர்த்தம்?''

''உங்களுக்கு எது பிடிச்சாலும் சரி.''

இந்தப் பதிலில் திருப்தி அடைந்தோ என்னவோ, பரசு அதற்கு மேல் அவளை எதுவும் கேட்கவில்லை. வழியில் அவன் உபசரித்த வாலா கடை அல்வா, ஐஸ்கிரீம், அத்தனைக்கும் தலைவலியின் மீது பழியைப் போட்டு மறுத்து விடுகிறாள், சியாமா.

'இது தப்பில்லையா... எவரோ ஒருத்தருக்காக, தாலி கட்டினவரோட ஆசையான வேண்டுகோள்களை நிராகரிக்கலாமா...'

மனசுக்குள் கேள்வி எழாமல் இல்லை.

'தினமுமா இப்படி....இன்னிக்கு மட்டும்.'

கையில் திராட்சைப் பொட்டலமும், உதட்டில் 'லல்லல்லா' மெட்டுமாய்ப் பரசு... இவர்கள் வீடு திரும்புகையில் இரவு மணி எட்டரை.

சியாமா அறைக்குள் நுழைந்தபோது பரசு கட்டிலில் மல்லாந்து படுத்து வாரப் பத்திரிகை ஒன்றில் விழிகளைப் பதித்தபடி ஒவ்வொரு கருப்புத் திராட்சையாய் அனுபவித்துத் தின்று கொண்டிருக்கிறான். அவளைக் கண்டதும் மெல்லிய சிரிப்பு ஒன்று இதழ்களில் படர...

''சமையலறை விட்டுதா...''

''உம்...''

தலையைக் குனிந்து தரையை நோக்கியவளின் கண்களில் அன்றைய பத்திரிகை தட்டுப்பட, உதட்டைக் கடித்தபடி அதை எடுத்து அலமாரியில் வைக்கிறாள்.

'அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி கிட்டத்தட்ட இந்த நேரத்துலதான் நீங்க போயிட்ட சேதி வந்தது...'

பத்திரிகைப் புகைப்படத்தில் 'டை' கட்டிய, கோட்டுப் போட்ட ராஜாராமன் புன்னகைக்கிறான்.

''சியாமா....''

பரசுவின் குரல் அவளது எண்ணக் குதிரைகளைக் கடிவாளம் போட்டு இழுக்க...

''என்ன....''

''லைட்டை அணைச்சுட்டு விடி விளக்கைப் போட்டுட்டுப் படுத்துக்கோயேன். எத்தனை நேரம்....''

இன்று பரசுவுக்கு அவள் தேவை. சொன்னால் கேட்க மாட்டான். சின்னக் குழந்தை மாதிரி அடம் பிடிப்பான். அதற்கும் மிஞ்சினால் 'ச்சீ' யென்று உதறிவிட்டுச் சுவரைப் பார்த்துப் படுத்து விடுவான். சியாமாவாக அவனிடம் கெஞ்சி மன்னிப்புக் கேட்டாலொழிய முகத்தை அவள் புறம் திருப்ப மாட்டான்.

'இன்னிக்கு வேண்டாமே...'

சொல்லத்தான் நினைக்கிறாள் சியாமா. எப்படிச் சொல்வாள்... என்னவென்று சொல்வாள்?

பரசு, அவளது கலக்கம் புரியாமல், விளக்கையும் அவளையும் ஒருசேர அணைத்து விடிவிளக்கின் ஸ்விட்சைத் தட்டிவிட...

''வேணாம் ப்ளீஸ்... இன்னிக்கு வேண்டாமே....''

சியாமாவின் குரல் வலுவிழந்து ஒலிக்க—

''நோ மேடம். எனக்கு இன்னிக்கு வேணுமே....''

பரசு கையிலிருந்த பொட்டலத்திலிருந்த நாலைந்து திராட்சைகளை அவளது வாயில் திணித்துவிட்டு, காகிதத்தைக் கசக்கி எறிய...

கசங்கிய காகிதத்தில் ராஜாராமனின் புகைப்படம், திராட்சைச் சாறு பட்டுக் கறையாகி... 'நெத்தி பெரிசுதான்' இப்படி அப்பாவால் விமரிசிக்கப்பட்ட அவனின் அகன்ற நெற்றி கிழிபட்டுச் சிதைந்து அந்த நிலையிலும் புன்னகை மாறாமல்...

சியாமாவின் கன்னத்தில் இறங்கிய சூடான கண்ணீர், பரசுவின் தோள் மீது பரவ...

''என்ன சியாமா அழறியா...''

''ம்...இல்லே, அந்த லைட்டையும் அணைச்சுடுங்களேன்...''

அவள், அந்த நிலையில் ராஜாராமனின் புகைப்படத்தைக் காணச் சகியாமல் துக்கம் நெஞ்சை அடைக்கச் சொல்கிறாள்.

''ஏன், தலையை ரொம்ப வலிக்கிறதா..''

அடுத்த கணம் அந்த அறையில் இருள் பரவுகிறது. பரசு, அவளின் நெற்றிப் பொட்டில் இதழைப் பதிக்கிறான்.

ராஜாராமன் இருட்டில் அமுங்கிப் போகிறான். தனக்காக ஒரு நாள் துக்கம் அனுஷ்டிக்கக் கூட முடியாத சியாமாவின் கண்ணீரைத் துடைக்க முயன்று — மின் விசிறியின் வேகமான சுழற்சியில், அறையைச் சுற்றிச் சுற்றிப் படபடத்து — அவள் முகத்தைக் காண முடியாமல், கட்டிலின் அடியில் தரையின் மூலையில் சோர்ந்து கிடக்கிறான்.

பல் டாக்டர்கள் கூறுகிறார்கள்

பற்கள், ஈறுகளின் முறையான பராமரிப்பிற்கு, பற்களை பிரஷ் செய்வது போன்றே ஈறுகளைத் தேய்த்துக் கொடுப்பதும் அவசியமாகும்

# போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் உபயோகியுங்கள்

இது உங்கள் பற்களை பிரஷ் செய்யும்போதே ஈறுகளையும் தேய்த்துக் கொடுப்பதற்கேற்ப விசேட முறையில் உருவாக்கப்பட்டது



# "ராம்கோ"வின் நிகரற்ற பாதுகாப்பைப் பெறுங்கள்...

## மிகச்சிறிய தொழிற் பட்டறையிலிருந்து மிகப்பெரிய தொழிற்சாலை வரை...

இயந்திரங்களின் இயக்க ஓசையுடன் உற்சாகமாகத் தங்கள் பணியில் ஈடுபட்டிருப்பவர்களைக் கொண்ட மிகப்பிரம்மாண்டமான தொழிற்சாலைகள், தொழிற் பேட்டைகள், கொட்டகைகள், தொழிற்பட்டறைகளுடன் இன்றைய இந்தியா தொழிற் துறையில் அதிவேகமாக முன்னேறி வருகிறது.

இத்தகைய தேசிய உற்பத்திச்சக்தி "ராம்கோ" கூரையின் கீழ் சுறுசுறுப்புடன் இயங்கி வருகிறது.

"ராம்கோ" வின் ஒப்பற்ற கூரைகள் இத்தொழிற்சக்தியின் பாதுகாப்பிற்கு தனது உத்திரவாதத்தை அளித்து வருகிறது. "ராம்கோ" தரத்தில் எல்லா சோதனைகளிலும் வெற்றி கண்டது. ஒவ்வொரு "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடும் குறைந்த பராமரிப்புச் செலவில் நிரந்தரப் பாதுகாப்பை உறுதியளிக்கும் வகையில் தயாரிக்கப்படுகிறது.

எனவேதான் மத்திய மாநில அரசுகளின் பல்வேறு துறைகள், பிரபல கட்டிடக் கலைஞர்கள், பொறியாளர்கள், மற்றும் கட்டிடத் தொழிலில் ஈடுபட்டுள்ள நிபுணர்கள், எல்லா வகையான தொழிற் சாலைகளுக்கும் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடு களையே தேர்ந்தெடுக்கிறார்கள்.

தரமான பொருட்களின் வரிசையில் இன்று "ராம்கோ" முன்னணியில் உள்ளது.



**Ramco**

அனைத்திற்கும் சிகரமானது.



ஈஸ்தர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிட்.
739, அண்ணாசாலை, சென்னை-600 002. போன் : 82006. கிளைகள் : பெங்களூர், எர்ணாகுளம், ஹைதராபாத், புனா, விஜயவாடா. தொழிற்சாலைகள் : அரக்கோணம் (தமிழ்நாடு), கரூர் (கர்னாடகம்).

ACIL-0344-81

கமலம் இரண்டு டாக்டர்களுக்கு மூன்று டாக்டர்களாகக் கன்ஸல்ட் செய்தாள். அவளை ஒவ்வொரு டாக்டராக அழைத்துக்கொண்டு போனது அவள் கணவன் வரதன்தான். எல்லோரும் சொல்லி வைத்த மாதிரி கர்ப்பப் பையில் பெரிய கட்டி இருப்பதால் அதிசீக்கிரம் பெரிய ஆபரேஷன் செய்து கொள்ள வேண்டியது மிக்க அவசியம் என்று சொல்லி விட்டார்கள்.

அவளது இரண்டாவது பிள்ளை நாராயணன் அம்மாவுக்கு ஆபரேஷன் என்றதிலிருந்து அம்மாவுக்கு ஜோடியாகப் பயப்பட்டு, தன் உடலையும் மனத்தையும் வெகுவாக வருத்திக் கொண்டான். பள்ளிக்கூடத்திலிருந்து வரும்பொழுது இதைப் பற்றியே யோசனை பண்ணிக் கொண்டு வந்தான். அடுத்த வாரம் அம்மா இத்தனை நாழி அறுவைச் சிகிச்சை முடிந்து சாதாரணமாக இருப்பாளா? கண்ணு நாணு என்று கூப்பிடுவாளா? வீட்டுக்கு வந்து முன்போலத் தனக்குப் பிடித்த நெய் அப்பமும் தேன்குழலும் செய்வாளா? – நினைப்பே கண்ணீரைக் குளம் கட்டியது. எதேச்சையாக தான் நின்றிருக்கும் இடத்தை நன்றாகப் பார்த்தபோது அவனுக்குத் தன்னையறியாமல் சிரிப்பு வந்தது. தங்கள் குடும்ப டாக்டர் பாலகிருஷ்ணன் கிளினிக் வாசலில் நின்றிருப்பதை அறிந்தான்.

குடும்ப டாக்டரிடம் உண்மை நிலவரத்தைச் சொன்னால் என்ன? உடனே கிளினிக்கில் நுழைந்தான் நாராயணன்.

''என்ன தம்பி! உடம்பு சரியில்லையா? மழையில் நனைந்து ஜுரத்தை வரவழைச்சுண்டாயா?'' என்று செல்லமாய்த் தம் வழக்கமான புன்சிரிப்புடன் கேட்டார்.

''எனக்கு உடம்புக்கு ஒண்ணுமில்லே டாக்டர்! என் அம்மாவுக்கு ஆபரேஷன் டாக்டர்! உங்களுக்குத் தெரியுமா?'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கேட்டான்.

டாக்டர் வாய் விட்டுப் பெரியதாகச் சிரித்தார். ''இதுக்கா தம்பி இப்படிக் கவலைப்படறே? எனக்குத் தெரியாம நம்ம வீட்டிலே ஒரு சமாசாரம் நடக்குமா? நான் தானே டாக்டர் லீலாவதியிடம் அம்மாவை அழைத்துக் கொண்டு போனேன்? நீ என்னவோ பாட்டி மாதிரி பயப்படறியே? நாளைக்குப் பெரிய டாக்டராகி, சர்ஜனாகி வரப் போகிறவன் இந்தச் சின்ன விஷயத்துக்கெல்லாம் பயப்படலாமா? இந்த ஆபரேஷன் முடிந்து உங்கம்மா ஒரு மாதமாவது முழு ஓய்வு எடுத்துக் கொள்ளணும். அப்புறம் அம்மா மாதிரி பர்பெக்ட் உமனை நீ பார்க்க முடியாது. இதுக்கும் நான் ஜவாப்தாரி!'' என்று தைரியமாகச் சொன்னார்.

நாணுவின் முகம் மலர்ந்தது.

''நானும் ஆபரேஷன் தியேட்டருக்கு வருவேன். அவள் நில

# ிசுவரூபம்

ராமப்ரியா



மனிதர்கள் இரண்டு கண்களோடும் ஒரு நாக்கோடும் பிறந்திருப்பதற்குக் காரணம் அவர்கள் எவ்வளவு பேசுகிறார்களோ அதைப் போல் இரண்டு மடங்கு பார்க்க வேண்டும் என்பதற்காகவே.
—சார்லஸ் லி கால்டன்

அறிவினிடத்தில் அமரும் தகுதி பெற்றது மௌனமே!
—ஹெர்பர்ட் வி. புரோச்னேவ்

ஏழ்மையே குற்றங்களின் அன்னை.
—மார்கஸ் அரேலியஸ் காஸியோடோரஸ்

யாரும் சரித்திரம்படைத்துவிடலாம். ஆனால் ஒரு மாமனிதனே அதை எழுத முடியும்.
—ஆஸ்கார் ஒயில்ட்

ஓர் அறிவாளியின் பேனா மை ஒரு தியாகியின் இரத்தத்தை விடப் புனிதமானது.
—முகம்மது

'லோகோ பிந்ந ருசி' என்று அவரவர் அவரவர்களுக்கு ருசியாக இருப்பதைத் தான் சாப்பிடுகிறார்கள். வயிற்றை நிரப்பத்தானே என்று எல்லோரும் ஒரே விதமான அன்னத்தைச் சாப்பிடுவது இல்லை. அப்படி அனுக்கிரகம் என்பது ஒன்றாக இருந்தாலும் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு ஸ்வாமியிடத்தில் ருசியிருக்கிறது. அவரவர்கள் அவரவர்களுடைய மனம் எந்த மூர்த்தியிடத்தில் லயிக்கிறதோ அந்த மூர்த்தியை உபாசிக்கிறார்கள்.
—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

'மானமிழந்த பின் வாழாமை முன்னினிதே!' கல்விகூட அத்தனை பெரிதில்லை, தைரியம் வேண்டும். எது வானாலும் நம்மைப் பிறர் தாழ்வாகக் கருதவும் தாழ்வாக நடத்தவும் இடம் கொடுக்கக் கூடாது என்ற மன உறுதி வேண்டும்.
—பாரதியார்

## ஆன்றோர் வாக்கு



வரத்தை ரன்னிங் காமண்ட்டரி மாதிரி சொல்கிறேன். நீ தைரியமாகப் போய் வா!''

ஆபரேஷன் தேதி நிச்சயமாகிவிட்டது. அந்தச் சூழ்நிலை பழக வேண்டும் என்பதற்காக நர்ஸிங் ஹோமில் சேர்த்துவிட்டார்கள். ரொம்ப சௌகரியமான நர்ஸிங் ஹோம்.

கணவரும் குழந்தைகளும் - அன்பைப் பொழிந்தார்கள். கமலத்துக்கு மனசு நெகிழ்ந்து போயிற்று.

ஆபரேஷனுக்கு முதல் நாள் காலை. டாக்டர் பாலகிருஷ்ணன் தம் வேலையை முடித்துக் கொண்டு கமலத்தைப் பார்க்க வந்தார்.

''வாங்க டாக்டர்!'' என்று முகமலர முகமன் கூறினாள் கமலம். ''பார்த்தீங்களா என்னை வரவேற்கும் அளவுக்குத் தைரியம் வந்துவிட்டது! தட்ஸ் குட். இதுதான் நான் கடைசித் தடவையா வரது'' என்று முடிப்பதற்குள் ''ப்ளீஸ் டாக்டர் ஏன் இப்படி அபசகுனமாப் பேசறேள்!'' என்று கதறினாள் கமலம். டாக்டர் சிரித்தார். ''அம்மா! ரொம்ப ஸெண்டிமெண்டலாக இருக்கிறீங்க. ஆபரேஷனுக்கு முன்னாடி கடைசி தடவையா வரதா சொன்னேன். வார்த்தைக்கு வார்த்தை அர்த்தம் பிரித்து ஆளை மடக்குறீங்க. இன்னைக்குச் சாயங்காலம் மகாபலிபுரம் போறேன். அங்கு வெளி நாட்டிலிருந்து வந்திருக்கிற இரண்டு கான்ஸர் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்களுக்குப் பார்ட்டி கொடுக்கறாங்க. அதுக்கு அவசியம் போகணும். அநேகமாக ராத்திரியே திரும்பி வந்துடுவோம்''என்று கூறிப் புறப்பட்டார் டாக்டர்.

நாணு கார்வரை கூடப் போனான். ''டாக்டர் மாமா! காலம்பற வந்துடுங்கோ! அங்கே உள்ளே நடப்பதை ரன்னிங்-காமெண்டரி மாதிரி சொல்றேன்னேளே!'' என்றான் சற்றும் கூடமில்லாமல். டாக்டர் அவனை அணைத்துத் தட்டிக் கொடுத்தார்.

கமலத்தை ஆபரேஷன் மேஜை மீது படுக்கவைத்தார்கள். காலை தினசரியை வாங்கிக் கொண்டு நர்ஸிங்ஹோம் பெஞ்சியில் உட்கார்ந்தார் கமலத்தின் கணவர் வரதன். பையிலிருந்த கண்ணாடியைப் போட்டுக் கொண்டு ஏற்பாடாகப் பேப்பரைப் பிரித்தார். முதல் பக்கத்துத் தலைப்புச் செய்தியைப் படித்தவுடன் இதயம் ஒரு நிமிடம் நின்று பின்னர் இயங்கியது. கொட்டை எழுத்துக்களில் தலைப்புச் செய்தியாகப் போட்டிருந்ததின் சாராம்சம் இதுதான்: ''கார் லாரியுடன் மோதல்! டாக்டர் பாலகிருஷ்ணன் பலி! மகா—கோரமான சம்பவம். மகாபலிபுரம் போகும் வழியில் நடந்தது!''

வரதன் அப்படியே ஆடிப்போய்க் கலங்கினார். கமலத்தையும், அவள் தியேட்டரில் போராடிக் கொண்டிருப்பதையும் நிமிஷத்தில் மறந்து விட்டார். மனசு பூரா எண்ணங்கள் அனைத்திலும் டாக்டர் பாலகிருஷ்ணன் தான் விசுவரூபமாக வியாபித்திருந்தார்.

நாணு பள்ளிக்கூடம் விட்டு வரும்போது டாக்டர் பாலகிருஷ்ணன் கிளினிக் வழி

யாகத்தான் வரவேண்டும். அவனை அதட்டி நர்ஸிங்ஹோமுக்கு வரவேண்டாம் என்று சொல்லிபள்ளிக்கூடம் அனுப்பியிருந்தார்கள். இப்போது டாக்டர் மாமாவை சந்தித்து அம்மாவுக்கு எப்படி இருக்கிறது என்று கேட்க நினைத்தான். கிளினிக் இழுத்துப் பூட்டப் பட்டிருந்தது.

''என்ன தம்பி!பேப்பர் படிக்கிறதில்லையா? டாக்டர் விபத்திலே பூட்டாரே!''

நாணுவுக்கு அம்மா அப்பா தன் சூழ்நிலை எல்லாம் மறந்து போய் விட்டது. ஒரே ஓட்டமும் நடையுமாக டாக்டர் வீட்டுக்குச் சென்றான். மாலைகள் மலையாகக் குவிந்து கிடந்தன. ''ஐயோ டாக்டர் மாமா! இப்படி அநியாயமாய்ப் போயிட்டீங்களே! இனிமே யார் கிட்டப் போய் என் மனசிலிருப்பதைச் சொல்லுவேன்!'' என்று கதறித் தீர்த்து விட்டான். வீடு திரும்பியபோது ''ஏண்டா இப்படி அழறே! என்ன ஆச்சு?'' என்று எல்லாரும் பதறினார்கள்.

''உங்களுக்கெல்லாம் ஒண்ணுமே தெரியாதா? நம்ம டாக்டர் மாமா போயிட்டார். இனிமே யார் கிட்டப் போய் நம்ம குறையை யெல்லாம் சொல்லுவோம்? டாக்டர் மாமா வீட்டுக்குப் போய் அவரைப் பார்த்துட்டு வரேன்!'' என்று விசும்பி விசும்பி அழ ஆரம்பித்தான்.

எல்லாரும் ஸ்தம்பித்து நின்றார்கள். எல்லாருக்கும் தெரிந்த விஷயம்தான். அம்மா ஆஸ்பத்திரியில் இருப்பதால் டாக்டரின் மரணச் செய்தியை இவ்வளவு ஆழமாக ஒருவரும் எடுத்துக் கொள்ளவில்லை. நாணுவின் மனசு அவர்களுக்கெல்லாம் ஆச்சரியமாக இருந்தது. இவ்வளவு சின்ன பயலுக்கு இத்தனை பெரிய மனமா? அம்மாவைப் பார்க்க நர்ஸிங்ஹோம் வர மறுத்து விட்டான் நாணு.

கமலம் கண் திறந்து பார்த்தபோது வரதனும் பெரிய குழந்தைகளும் தூரத்தில் நின்று கொண்டிருந்தார்கள். குளுகோஸ் ட்யூப் வழியாக ஊசி மூலமாக உடலில் சென்று கொண்டிருந்தது. கமலம் சுற்று முற்றும் ஒருவர் பாக்கி இல்லாமல் பார்த்தாள். அம்மா பார்க்கறா, அம்மா பார்க்கறா என்று அவள் குழந்தைகள் ஆர்ப்பரித்தன. ''உஷ் சத்தம் போடாதீங்க. பேஷண்டுக்கு முழு ஓய்வு தேவை. பார்த்து விட்டுப் போய் விடுங்கள்!'' என்று அவள் கையைப் பிடித்த வண்ணம் உட்கார்ந்திருந்த நர்ஸ் எல்லோரையும் விரட்டினாள்.

வரதன் மட்டும் நர்ஸை அனுமதி கேட்டு அருகில் வந்தார். ''கமலம்! எல்லாம் ஆகி விட்டது. யூ ஆர் ஆல் ரைட்!'' என்றார். கமலத்தின் உதடுகள் புன்னகைக் கீற்றோடியது. ''நாணு எங்கே?'' என்றாள். ஆட்டு மந்தையில் ஒரு ஆடு குறைந்தாலும் தெரிந்து போகுமாம். அந்தப் பலவீன நிலையிலும் தன் கடைசிக் குழந்தை வரவில்லை என்பதைச் சொல்லிவிட்டாள். ''அவன் அப்போதே வந்து விட்டுப் போய்விட்டான். உன்னைப் பார்த்து ரொம்ப உணர்ச்சி வசப் படுகிறான். அவனை வீட்டுக்கு அனுப்பி விட்டேன்.'' என்று தைரியமாக ஒரு பச்சைப் பொய்யைச் சொன்னார். கமலத்தின் முகம் சந்தோஷத்தினால் மலர்ந்தது. பேச முடியவில்லை. எனினும் கஷ்டப்பட்டு உயிரைக் கையில் பிடித்தவாறு. ''டாக்டர் பாலகிருஷ்ணன் வந்தாரா?'' என்றாள் கிணற்றிலிருந்து பேசுகிற மாதிரி.

வரதன் மார்பு படபடத்தது. கண்கள் குளமாகிவிடுவேன் என்று பயமுறுத்தின. எல்லாவற்றையும் தைரியமாக அடக்கியவாறு, ''ஓ! வந்தாரே! வழக்கம் போல் ''ஷி வில் பி எ பர்ஃபெக்ட் உமன்!'' என்றும் சொன்னார்'' என்று தயங்காமல் பொய்யைச் சொன்னார்.

கமலத்துக்கு மகா திருப்தி. அப்பாடா! பிழைத்து விட்டோம். இனி உலகத்தில் அனுபவித்துப் பார்க்க வேண்டியவை எத்தனையோ இருக்கு என்ற திருப்தியுடன் அசதியாலும் மயக்க மருந்தின் பலத்திலும் கண்களை மூடிக் கொண்டு தூங்கலானாள்.

''அப்பா! நாளைக்கு டாக்டர் மாமாவைப் பற்றிக் கேட்டாள்?'' என்று கேட்டான் பெரிய பெண்.

''நாளைக் கவலை நாளைக்கு! இன்றைய கண்டம் இதுவரை போயிற்று!'' என்று பெருமூச்சு விட்டார் வரதன்.



''நீதான் என் உயிர்க் காதலி! நாம இந்த ஊரை விட்டே ஓடிப் போய் எங்கேயாச்சும் வாழலாம்னு சொன்ன என்னை நம்பி வந்திருக்கியே...''

''உங்களை நம்பி நான் மட்டுமா வந்திருக்கேன்? என்னோட அப்பா, அம்மா, தம்பி, தங்கை எனக்குப் பின்னாடி வந்துக்கிட்டிருக்காங்க!''

-கமலதியாகராஜன்

# ஏர் போர்ட்

"டில்லி போய்ச் சேர்ந்ததும் ஒரு எஸ். டி.—டி. கால் போட்டுச் சொல்லிடு... ஏம்பா டிரைவர் அந்தப் பொட்டலத்தை நசுக்காமல் அப்படியே வை."

"என்னது பொட்டலத்தில்?"

"ஒண்ணுமில்லே...கமலாவுக்கு மல்லிகைப் பூ... அங்கே ஏது இந்த மாதிரி மல்லிப்பூ."

"டில்லி ப்ளைட் அனௌன்ஸ் பண்ணுறா?"

"சார்... முதலில் ஓ.கே. பாஸஞ்சருங்களுக்குப் போர்டிங் கார்ட் கொடுத்துட்டுத்தான் சொல்ல முடியும். வெயிட்டிங் லிஸ்டிலே உங்க நம்பர் என்ன?"

"நான் சொல்றேனே, நம்ப மெட்ராஸ் ஏர்போர்ட்டுக்கு என்னிக்குத்தான் விமோசனம் பிறக்குமோ... அமெரிக்காவிலே இதை விடக் குட்டி குட்டியாக இருக்கிற ஏர் போர்ட்லே பில்டிங்கே ஆளைச் சாப்பிட்டுடும்."

"கல்கத்தா பிளேன் வந்து அந்த பிளேன்தான் டில்லி போகணுமாம். கல்கத்தா பிளேன் வர்ற வழியே காணும்."

"ஸார்... உங்களுக்கு லக்கேஜ் ஜாஸ்தி இல்லேன்னு இந்த அட்டைப் பெட்டியை உங்க டிக்கட்டுலே புக் பண்ணிக்குங்க... என் டாட்டர்-இன்-லா... டில்லி போய் அமெரிக்கா போகணும். கைக்குழந்தை. அதனால் லக்கேஜ் ஜாஸ்தியாயிட்டுது."

"அமெரிக்காவிலே எங்கே?"

"ஹுஸ்டன்."

"அப்படியா? என் பிரதர்-இன்-லாவின் சன் இருக்கிறான்."

"ஹலோ...ஹலோ... எங்கே இப்படி?"

"ஒரு ஃப்ரண்ட் பாம்பே போறான். ஸீ ஆஃப் பண்ண வந்தேன்."

"ஏர் பஸ்ஸா...."

"என்னைக் கேட்டால் ஏர் பஸ்தான் இருக்கிறதுக்குள்ளே கமார்... போயிங் சரியான கட்டை வண்டி.. டில்லி போகறதுக்குள்ளே இடுப்பு எல்லாம் வலி... இதைப் பார்க்க டிரெயினிலேயே போயிடலாம்னு தோணறது."

"பையன் பணம் அனுப்பி நீ உடனே 'ஏர்லே' வாம்மா என்றான், ட்ரெயின்லே ஏக்சோ... பீதியை அக்கௌண்டண்டுகிட்டேக் கொடுத்துடு."

"வர்றபோது இரண்டு நாதன் ஸ்டைல் வாங்கிண்டு வந்துடுங்கோ."

"முதல்லே காமர்ஸ் மினிஸ்டிரிலே வேலை முடிஞ்சு கையிலே லைசென்ஸ் வாங்கிக்கணும். அப்புறம்தான் நாதன்னே மதுபாலாவோ!"

"பாட்டி, டில்லி லேருந்து எனக்கு ரோலர் ஸ்கேட்டர் வாங்கி வரணும். இல்லாட்டா எனக்குக் கோபம் வரும்."

"சினிமா ஸ்டார் மாதிரி யாரோ போறுங்களே...மஞ்சுளாவா?"

"ஏர் ஹோஸ்டஸ்! தலை மேலே விசித்திரமான கொண்டையாக இருக்குதே!"

"இப்ப இந்த மாதிரி ஹேர் ஸ்டைல் பண்ணிய விக் ரெடிமேடாகக் கிடைக்கிறது."

"வரேன். குழந்தைங்க பத்திரம்."

"போன உடனே கேபிள் கொடு. இல்லாட்டா டிரங்க் போட்டுடு."

"புதன் கிழமை இத்தனை நாழி நியூயார்க்லே இருப்பே."

"யுவர் அட்டன்ஷன் ப்ளீஸ்...."



''[illegible] மாசம். சொன்னால் சிரிப்பீங்க. நாலாம் மாசம்தான் இது. அதுக்குள்ளே அவள் மாய்ஞ்சு போறா. இவரு தவிச்சுப் போறான். இப்பவே பெட் ரெஸ்டாக இருக்காளாம். நான் ஏழு பெத்தேன்.''

''பட்ஜெட் வர்றதே. போய் மினிஸ்டரைப் பார்த்து மகஜரைக் கொடுக்கப் போகிறோம். இந்த பட்ஜெட்டிலேயாவது ரிலீஃப் கிடைக்கிறதான்னு பார்க்கலாம்.''

''சார்... கொஞ்சம் இந்தப் பெட்டியைப் பார்த்துக்குங்க. ஒரு போன் பண்ணிட்டு வருகிறேன்.''

''சார்...சார்... வழியை விடுங்க. மினிஸ்டர் வர்றார்.....''

''மினிஸ்டர் வந்தா என்னவாம்? மினிஸ்டரை விட இவங்க பண்ற தடபுடல்தான் ஜாஸ்தி.''

''ப்ளேட் இன்ஷுரன்ஸ் எங்கே பண்றாங்க?''

''ஏமண்டி....எக்கடா...ஹைதராபாதா?''

''லேதண்டி.. டில்லி. மீரு?''

''யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ். பாஸஞ்சர்ஸ் டு ஹைதராபாத், டில்லி, பை இண்டியன் ஏர்லேன்ஸ் ஃப்ளைட் ஐ. ஸி....''

''அசரீரி கொரல் குடுத்துடுத்து. போய் போர்டிங் கார்டை வாங்கிண்டு வந்துடறேன்.''

''மண்டே நைட் ஃப்ளைட்லே வந்துடுவேன். பெரிய வண்டியை அனுப்பி வை... இந்தாப்பா டிரைவர்... பெட்ரோல் போட்

டயலாக்:

# அகஸ்தியன்



'கம்பன்; எல்லாம் பொதுளிய தங்கச் சுரங்கம்' என்பது திரு. வி. க. வின் மதிப்பீடு.

உண்மைதான். கம்பன் என்னும்போது அவன் சொல்லாட்சிச் சிறப்பு மட்டுமின்றி அவனுடைய காவிய யுக்திகள் பலவும் நம் நினைவுக்கு வருகின்றன.

நீண்ட நெடுங்காலக் கொள்கைகள் சிலவற்றையும் அவன் மாற்றியிருக்கிறான்.

சங்க காலக் கொள்கை 'மன்னன் உயிர் போன்றவன்; மக்கள் உடல் போன்றவர்கள்' என்பது. 'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே; மன்னர் உயிர்த்தே மலர்தலை யுலகம்' என்பது பெரும்பாலும் சங்க காலக் கொள்கை. கம்பன் இந்தக் கொள்கையை மாற்றி, ''மன்னன் உடல்; மக்களே உயிர்'' என்றான். ''வையம் மன்னுயிரா அம்மன்னுயிர் உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன்'' என்பது கம்பன் வாக்கு.

கம்பன் ராமாயணத்துக்கு ஒரு முக்கியமான அடிப்படை உண்டு. அது தமிழர் வாழ்வு நெறியை ஒட்டியது.

கம்பன் காவியம் தோன்றும் வரை கற்பு என்பதைப் பெண்களுக்கே சிறப்பித்துக் கூறி வந்தது தமிழ் இலக்கியம். கம்பன் தோன்றும்வரை ஒரே நாயகியுடன் வாழ்ந்த நாயகனைக் கொண்ட காவியம் தமிழில் இல்லை.

சமீபத்தில் ராஜா அண்ணா மலைபுரத்தில் கட்டி முடித்துள்ள ஐயப்பன் கோவிலில் குடமுழுக்கு விழா நடந்தது. பகல் 12-45க்கு சிருங்கேரி சுவாமிகளும், ஐயப்பன் கோவில் பிரதான தந்திரியும் கும்பத்திற்கு அபிஷேகம் செய்து கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் கருடன் ஒன்று கோயிலைச்சுற்றி வட்டமிட்டுப் பறந்தது. அதைப் பார்த்த லட்சக்கணக்கான பக்தர்கள் மெய் சிலிர்த்துப் போனார்கள்.

காரணம், சபரிமலையில் திரு ஆபரணப் பெட்டியை சன்னிதானத்திற்கு எடுத்து வரும் போதும் அதன் மேலாக கருடன் ஒன்று பறந்து கொண்டே வரும்.

- ஆர். இராதாகிருஷ்ணன்

## இலக்கியத்தில் இறையுணர்வு

# ஏன் அப்படிச் சொல்ல



அதுவரை ஆண்களுக்கு வீரமே பெரும் குணமாகப் போற்றப்பட்டுவந்தது. அந்த வீரத்துக்குப் ''போராண்மை'' என்று பெயர். போர்க்களத்தில் சென்று வீரம் காட்டும் போராண்மை இன்றியமையாத ஒரு பண்பு தான். ஆனால் ஆண்மை என்றாலே போராண்மைதானா? புறநானூறு, பதிற்றுப் பத்து போன்ற நூல்கள் அப்படித்தான் கூறுகின்றன.

கம்பன் திருக்குறளைக் கற்றான். ஒரு குறள் அவனைக் கவர்ந்தது. அது ''பிறன் மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு அறன் அன்றோ ஆன்ற ஒழுக்கு'' என்பது. பிறர் மனைவியை விரும்பாத நல்ல குணத்துக்குப் 'பேராண்மை' என்று திருவள்ளுவர் பெயர் கொடுத்திருந்தது கம்பனுக்கு ஒரு புதிய உணர்வைத் தோற்றுவித்தது. அவன் ஒரு முடிவெடுத்தான். ''போர்க் களத்துக் காட்டப்பெறும் வீரமாகிய போராண்மை பெரியதா? அல்லது பிறன் மனை விரும்பாத பேராண்மை பெரியதா?'' என்று காட்ட நினைத்தான். அதனால் போராண்மை மட்டுமே படைத்த இராவணனை ஒருபாலும், போராண்மையும், பிறன்மனை நோக்காத பேராண்மையும் படைத்த இராமனை ஒருபாலும் நிறுத்தி இருவரையும் மோத விட்டுப் போராண்மை தோற்றது. பிறன் மனை நோக்காத பேராண்மை வென்றது என்று காட்டினான். அதுவே கம்ப ராமாயணம்.

இராமனின் பேராண்மைக் குணத்தை மேலும் ஒரு புதிய பக்குவத்தில் கம்பன் தெரிவிக்கிறான்.

இராமனையும், இளைய பெருமானையும் அழைத்து கொண்டு, மிதிலை சென்ற விசுவாமித்திர முனிவன் இராமனை ஜனகனுக்கு அறிமுகப்படுத்தினான். இராமனுடைய பரம்பரைப் பெருமையைக் கூறினான் விசுவாமித்திரன். ''ஜனகனே! மாந்தாதா, சிபி இவர்கள் பரம்பரையில் வந்தவன் தசரதன். அவன் மகன் இராமன்'' என்று கூறிய விசுவாமித்திரன் சிறிது பரபரப்புடன், ''ஜனகனே! இராமன் தசரதனுக்கு மகன் என்பது பெயரளவுக்குத்தான்! இராமனுக்கு உபநயனம், வேதப் பயிற்சி ஆகிய

வற்றைச் செய்வித்ததுடன் அவனை வளர்த்தவனும் வசிட்டன் காண்'' என்றும் கூறினான்.

''இராமன் தசரதனுக்கு மகன் என்பது பெயரளவுக்குத்தான்: இவனை வளர்த்தவனே வசிட்டன்'' என்று விசுவாமித்திரன் ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்?

விசுவாமித்திரன் உள்ளத்தில் தோன்றிய எண்ணம் நமக்குத் தெரிகிறது.

இந்த உலகில் தன் பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் எந்தத் தந்தையும் தன் மருமகன் தன் மகள் மீது மட்டுமே அன்புடையவனாக இருத்தல் வேண்டும் என்றும் வேறு பெண்களை எண்ணவும் கூடாது என்றும்எதிர்பார்ப்பது இயற்கை தானே! இப்போது ராமனுக்குச் சீதையைத் தரவேண்டிய தந்தையாகிய ஜனகனுக்கும் அந்த எண்ணம் இருக்கத்தானே செய்யும்! இராமனைத் தசரதனுக்கு மகன் என்று மட்டும் சொல்லி நிறுத்தி விட்டால், தசரதன் பல மனைவியரைத் திருமணம் செய்தவன், அவன் மகனும் அப்படியே இருக்கக் கூடும் என்று நினைத்து ஜனகன் சீதையைக் கொடுப்பதில் தயக்கம் கொள்ளலாமல்லவா? அதனால் ''இவன் தசரதனுக்கு மகன்

# வேண்டும்?

கீரன்

என்பது பெயரளவுக்கே; இவனை ஒரே மனைவியான அருந்ததியுடன் வாழ்ந்த வசிட்டனே வளர்த்தான். அதனால் இவன் தந்தை போல அல்ல'' என்ற எண்ணத்தை ஏற்படுத்தவே விசுவாமித்திரன் அப்படிச் சொன்னான்.

ஓர் ஓவியத்தின் சிறப்பு, காண்பாரைக் கவர வேண்டுமாயின் அந்த ஓவியம் வரையப்பட்டுள்ள வண்ணத்துக்கு நேர் மாறான பின்னணி அமைந்திருக்க வேண்டும். இராமனுடைய பேராண்மையை விளக்கப் பல தாரத்தை மணந்த தசரதனைக் கம்பன் பின்னணியாகக் கொண்டுள்ளான்.

''நிறையோடும் அரசு இறைஞ்சும்
செறிகழற் கால் தசரதனும்
பொறையோடும் தொடர் மனத்தான்
புதல்வர் என்னும் பெயரே காண்!
உறை ஓடும் நெடுவேலாய்!
உபநயன விதி முடித்து
மறை ஓதுவித்து இவரை
வளர்த்தானும் வசிட்டன் காண்!

### கல்லில் மலர்ந்த காவியம்: 9

# ஸ்ரீவைகுண்டம்

நெல்லை மாவட்டத்தில் தென் பொருநை (தாம்ரவர்ணி) நதிக்கரையில் உள்ளது ஸ்ரீவைகுண்டம். நம்மாழ்வார் பாடல் பெற்றது. இங்குள்ள ஆலயத்தில் பல வகையான சிற்பங்கள் உள்ளன.

அதோ வாய் பொத்திய மாருதியின் தோளில் கைவைத்து நிற்கும் வில்ராமன் பக்கலில் சுக்ரிவன் அஞ்சலி ஹஸ்தனாக நிற்கிறான். அனுமானின் பக்தியும், சுக்ரிவனின் விநயமும் ராமனின் பெருமிதமும் நம்மை எல்லாம் கவர்வனவாக உள்ளன.

அதே வில்ராமன் சிற்பத்தின் இடையில் உள்ள நுணுக்கமான ஆபரணங்களைக் காணுங்கள். தத்ரூபமான அழகுப் படைப்புகள். கல்லை கொண்டு பொன் நகைகள் சமைத்துள்ளான் சிற்பி.

நமது முன்னோர்கள் நமக்குப் பரம்பரைச் சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது இந்த கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத்தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும் தான்! அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ். "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை செய்வதையே தனது தலையாய கடமையாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!

**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**



# 6

**கற்பெனும் திண்மையில் இவள் பூரித்த கரைசலாக்கும் என்ற நம்பிக்கையினால்..**

டியர் நளினி,

அறையும் காலுமாக நானொரு மேனாட்டு தத்துவத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். யாரோ அதைப் பெரிதாக எடுத்துப் பேசுவதாகச் சொல்வார்கள். ஜீவன்கள் உயிர் வாழ்வது என்பதே ஓர் அவஸ்தையைச் சுமப்பதுதானும். இதற்காக மனிதன் தற்கொலை செய்து கொண்டால் கூட அதில் ஒன்றும் நஷ்டமில்லையாம். மாருக லாபம் தானும். இந்த வாழ்தல் என்னும் அவஸ்தையை அறிவின் துணை கொண்டு தவிர்த்துக்கொள்கிற காரியமாம். இதுநாள்வரையில் எனக்கு ஒரு வேடிக்கையாகவும் அபத்தமாகவும் தோன்றிய இந்தக் கருத்து இப்போது சரி யென்று படுகிறது.

ஹேமில்டன் என்று நினைக்கிறேன், சொன்னுன், மனிதன் என்பதே மனம்தானென்று. சம்ஸ்கிருதத்தின் இந்த 'மனுஷ்யன்'கூட மனதை உடையவன் என்ற அர்த்தத்தில் இருக்கிறதோஎன்னவோ. இவை உண்மையானுல் அதாவது மனமே மனிதன் என்ருல் மனிதனே முட்டாள்தனங்களின் திரட்சி என்று ஒரு வரையறை செய்ய நியாய மிருக்கிறது என்றே எனக்குத் தோன்றுகிறது.

கழிசடையும் முட்டாள்தனமுமான இந்த மனத்தைக் கொஞ்சம் அலசித்தான் பாரேன். இது தன்னைச் சித்ரவதை செய்து கொள்வதற்காகவே எத்தனை சாகசங்களையும் பாய்ச்சல்களையும் பயின்று வைத்திருக்கிறது!

முன்னுல் தாவி, பின்னுல் தாவி, நேராக, குறுக்கே, வேடபரி ஓட்டத்தில் அல்லது செஸ்போர்டு குதிரைத் தாவலில்... இது எப்படியெல்லாம் தன்னைக் காயப்படுத்திக் கொள்கிறது!

ஏதோ ஒன்று தூர தூர தூர உறவாக இதன் காதில் விழ வேண்டியது. அல்லது கண்ணில் படவேண்டியது. உடனே இது சம்பந்தப்பட்ட செத்துப் புல் முளைத்துப் போன ஒரு காரியத்தின் மேல் என்னமாய்ப் போய் விழுகிறது. எப்படி இடித்துக் கொண்டு ஓடுகிறது. எப்படி மிதித்துக் கொண்டு கத்துகிறது.

நேற்று நடந்ததைக் கேள். நேற்று: சென்ற கடிதத்தில் சொல்லியிருந்தேனே, வரதராஜுலு என்று; எஸ். ஐ. அவர் சொல்லிய அவரது ஸிஸ்டர், பெயர் ராதா, வந்திருந்தாள். — எங்களை யெல்லாம் விருந்துக்கு அழைத்துப்போவதற்காக. ஒருபேச்சில் அவள் என்ன படிக்கிருள் என்ற கேள்வி வந்தது. பதில் பி.ஏ. லிட்டரேச்சர். இதைக் கேட்டதும் என்னுடைய இந்த மனம் எங்கே தாவியது தெரியுமா?

ஒரு நாள் ரகுவோடான அரட்டையில், 'பின்ன நீங்கள்ளாம் பி.ஏ.யில் என்னதான் படிக்கிறீங்க?' என்ற அவனது கேள்விக்கும், 'ம், பி.ஏ. படிக்கிறோம்' என்று சொல்லி விட்டுக் கலகலவென்று சிரித்தேனே அந்த இடத்திற்கு.

அந்த அரை நொடியில், இல்லை கால் நொடியில் ஒரு பழைய கிளர்ச்சி கூட நளினி. இந்த வெட்கம் கெட்ட மனசிற்கு இது எப்படித்தான் சாத்தியமாகிறது? இது உணர்வாகியபோது எனக்கு எப்படி இருந்தது தெரியுமா? மனம் என்ற இது தனியாக என் முன் இருந்திருக்குமானுல் அதை அப்போது கழுத்தைப் பிடித்துத் திருகியிருப்பேன்.

ஒரு சுவாரஸ்யமான விஷயம் நளினு. அந்த வரதராஜுலுவின் அந்தத் தங்கை இருக்கிருளே, அவளுக்கும் அவள் அண்ணனுக்கும் எவ்வளவு உருவ ஒற்றுமைதெரியுமா? அவள் அங்கு வந்தபோது தன்னை அறிமுகப் படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமே இருக்கவில்லை. பஸ்ஸரை அழுத்திவிட்டுக் காத்திருந்தவளை, யாரென்று பார்க்கப்போன என் அத்தை மகள் ருக்கு, பார்த்த மாத்திரத்தில் புரிந்துகொண்டு, தைரியமாக, 'வாங்க, நீங்க மிஸ்டர் வரதராஜுலுவோட ஸிஸ்டர்



தானே?' என்றே கேட்டு விட்டாள். அவ்வளவு ஒற்றுமை நளினி. சுலபமாகவும் சுருக்கமாகவும் சொன்னால், அவன் வரதராஜுலுவின் பெண் வடிவம்.

ஆனால் குணத்தில் எப்படி என்றுதான் தெரியவில்லை. அது தெரிந்தால் இன்னும் எவ்வளவு சுவாரஸ்யமாக இருக்கும்! ஒரே குணம் ஆணுமாகவும் பெண்ணுமாகவும் எப்படிச் செயல்படுகிறது என்று தெரியுமே. ஆனால், அது அநேகமாக சாத்தியமில்லாதது தான். உருவத்தைப் புற நிலைகள் பாதிப்பதில்லை. ஆனால் குணத்தை வாழ்நிலைகளும் சூழ்நிலைகளும் எப்படியெப்படி அடிகொடுத்து என்னென்னவாய் மாற்றி விடுகின்றன!

இந்தக் குணம் — சூழ்நிலை என்று சொல்லும்போது பேசுவதற்கு இன்னொரு விஷயமும் இருக்கிறது — இந்த வரதராஜுலு பற்றியே. பெரிய கவிஞனாக வருவதற்கு இருந்தேன் என்று சொல்கிற இந்த ஆள், நேற்று நாங்கள்




இருக்கும்போதே அவர்கள் வீட்டுப் பையன் ஒருவனை அதட்டிய அழகைப் பார். அந்தப் பையன் தனது சிறிய தகப்பனாரை எல்லோரும் கேலி செய்கிறார்களே என்று இவனும் ஏதோ சொன்னானாம். அதற்கு இந்த ஆள் சொல்கிறது. ''ஏன்டா எல்லாரும் கேலி செஞ்சா நீயும் கேலி செய்யறதா? பெரியவங்க சின்னவங்க இல்லையா? ஒன்னை யெல்லாம் தூக்கிப் போட்டு மிதிக்கணும்டா.'' இது எப்படி? இதைக் கேட்டு அந்தத் தங்கையே சொன்னாள், ''நீ பேசாம வேலைய ரிஜைனமாப் பண்ணிடு அண்ணா. திருட்டுப் பசங்க கிட்டயும், மொரட்டுப் பசங்க கிட்டயும் பழகிப் பழகி நீயும் ரொம்ப ரஃப்பா ஆகிக்கிட்டு வர்ர'' என்று.

அதற்கு இந்த ஆள் நாணத்தோடு நாக்கைக் கடித்துக் கொண்டது.

அந்தப் பெண்ணே அப்புறம் சொன்னாள், 'முன்னயெல்லாம் எவ்வளவு ஜென்டிலாகவும் பொலைட்டாகவும் பேசுவாரு தெரியுங்களா' என்று. ஒருவேளை எதிர்பார்க்கப்படுகிற மணமகளாகிய நான் பயந்து விடுவேன் என்ற பயமோ என்னவோ அவளுக்கு.

இன்னொரு சுவாரஸ்யமான விஷயம். (இன்று சுவாரஸ்யங்களாகப் பொழிந்து தள்ளப் போகிறேன் போ!) வரதராஜுலு வந்து அழைத்தபோது எந்தப் பிகுவுமின்றி அழைப்பை ஏற்றுக் கொண்ட அத்தை, ராதா வந்ததும் டாக்ஸியில் தாவிக் கொண்ட அத்தை, அவர்கள் வீட்டில் ஒரு அரை மணி நேரத்துக்குள்ளாகச் சோர்ந்து போய் விட்டாள். அங்கே என்னை மட்டும்தான் பெண் பார்க்கும் நோக்கம் இருக்கிறது என்ற விஷயம் சூசகமானதால் வந்தது இந்தச்சோர்வு. பாவம், அதற்குப் பிறகு அவளைப் பார்க்க எனக்குச் சங்கடமாக இருந்தது.

இடையில் உறவுமுறை பற்றி ஒரு பூடகமான ஆராய்ச்சி நடந்தது. கடைசியில் அண்ணன் தங்கை முறையாக இருந்து விடக் கூடாதல்லவா? இதில் கொஞ்சம் உற்சாகமாக ஈடுபட்டாள் அத்தை. ஊர் உலகத்தில் உள்ள அவர்கள் சொந்தம் - எங்கள் சொந்தம் எல்லாம் ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டது. அவளது துரதிருஷ்டம் அவர்கள் இவர்களுக்கே பங்காளியானார்கள்.

அது சரி நளினி, இது எனக்கு மட்டும் துரதிருஷ்டம் இல்லையா? இவர்கள் பேச்சை அனுமானித்துப் பார்த்தால் இவர்கள் பெண் கேட்டுச் சீக்கிரமே சென்னை வருவார்கள் போலிருக்கிறதே.

பட்ட காயத்தில் இன்னும் ரத்தம் உறைவதுகூட நேரவில்லை. முதலில் சொன்னபடி இந்த முட்டாள் மனம் அந்த ரகுவை முற்றுமாக வெறுத்துவிடவும் இல்லை. ஒரு சின்ன மூலையில் ரொம்பச் சின்ன ஒரு மூலை

யில், ரகு, ஒருவேளை, 'நான் தப்பு செய்து விட்டேன். அல்லது தமாஷ் செய்தேன்' என்று வந்து விடமாட்டாரு என்ற நப்பாசை தனது கடைசி விரலை கொக்கியாய்ப் போட்டுத் தொங்கிக் கொண்டிருக்கவும்செய்கிறது. அதற்குள் கல்யாணமா?

கல்யாணம்! அதுவும் எப்படிப்பட்ட கல்யாணம்! தேவாதி தேவர்கள் வந்தாலும் அசைக்க முடியாதபடி கற்பென்னும் திண்மையில் இவள் பூரிதக் கரைசலாக்கும் என்ற நம்பிக்கையினாலேயே கையில் தாலியைத் தொடுகிறேன் என்று மேளம் கொட்டி பிரகடனப்படுத்திக் கொண்டு நடக்கிற கல்யாணம். அங்கே நான் மறைத்துக் கொண்டும், நடித்துக் கொண்டும், சிரித்துக் கொண்டும்!

சரி தோழி, இனி தப்புதல் என்பது இல்லை என்றான பிறகு பண்ணிப் பண்ணி விஷயங்களைக் கிளறிப் பார்த்துக் கொண்டிருப்பதில் லாபம் ஒன்றுமில்லை. என்ன நான் அலசினாலும் நானாகச் செய்ய என்ன இருக்கிறது? இவர்கள் வந்து பெண் கேட்டு அம்மாவும் அண்ணனும் சரி சொல்லிவிட்டால் காரியத்தை மறிப்பது யார்? ரிங் மாஸ்டர் அண்ணன் கட்டுகிற இடத்தில் உட்கார்ந்து கெட்டி மேளம் கொட்டியதும் கழுத்தை நீட்டுவதைத் தவிர வேறு வழியில்லையே!

ஏன் நளினி, நான் ஏன் இப்படிச் செய்யவில்லை? எனக்குத்தான் பொருளாதார சுதந்திரம் கூடக் கிடைத்திருந்ததே. வேலையில் இருந்து கொண்டு சம்பளம் வாங்கினேனே. நான் ஏன் "ஆமாம், நான் ஒருத்தனைக் காதலித்தேன். அவனுக்கு உடன்பட்டிருந்தேன். அவன் நீசனாகிப் போனான். இதைத் தெரிந்தும் என்னை விரும்புகிற ஒரு மனிதன் என்னை மணந்தால் போதும். இதை நீங்கள் அங்கீகரித்தால் என்னை வீட்டோடு வையுங்க. இல்லையேல் ஏதாவது ஹாஸ்டலில் தங்கிக் கொள்ள என்னால் முடியும்" என்று சொல்லவில்லை? உண்மையைக் கேவலமாக மறைக்கவும் பொய்களை ரொம்ப சாகஸமாகப் பேசவும் மன வலிவும் அறிவும் இருந்த எனக்கு இது மட்டும் ஏன் சாத்தியப்படவில்லை?

இன்று மாலை கோவிலுக்குப் போகிறோம். மதுரை மீனாட்சியம்மனிடம் இதைக் கேட்கப் போகிறேன்.

உனதன்பு சுலோசனா.




S. Varatharajulu B.Sc. Camp:
Sub Inspector of Police. Date :

டியர் ரேவதி, மை ஸ்வீட் ஹார்ட்!

ஆயிரம் முத்தங்கள்.

நலம்தானே?

மிக்க மகிழ்ச்சியான ஒரு செய்தி. உனக்கு சீக்கிரமே தங்கை வரப் போகிறாள். ரொம்ப அழகான தங்கை உன்னைப் போலவே.

நேற்று பெண் பார்த்தாகி விட்டது. பெண் இங்கு வந்திருந்தாள். அவனுக்கு விருந்து. அவள் என்னைப் போன்றதொரு சப் இன்ஸ்பெக்டரின் தங்கைதான். அவன் எனது நல்ல நண்பன். இவர்களது சொந்த ஊரும் தற்போது அவன்வேலை பார்ப்பதும் சென்னை.

இவள் பி.ஏ. படித்திருக்கிறாள். இவளை முன்பு பார்த்தவர்கள் ரொம்பவும் ஜோவியல் டைப் என்று சொன்னார்கள். ஆனால் என்னிடம் மட்டும் அளந்து அளந்து பேசுகிறாள். என் தங்கை அவளுக்குக் காதல் வந்து விட்டது என்று சொல்கிறாள். அவளை எல்லோருக்கும் பிடித்துப் போய்விட்டது.

குணம் ரொம்ப நல்ல குணம். ரொம்பப் பண்பட்டவளாகவும் பொறுமைசாலியாகவும் தெரிகிறாள். நம் விஷயம் தெரிந்தால் கூட ரொம்ப அலட்டிக் கொள்ள மாட்டாள் என்றே எனக்குப் படுகிறது.

அடுத்த மாதம் பெண் 'பார்க்க' சென்னை போகிறோம். திரும்பும் வழியில் அங்கு இறங்குகிறேன். இறங்கலாமல்லவா?

சென்ற கடிதத்தில் உனது கணவன் பரோலில் பத்து நாள் வந்து பிடுங்கி எடுத்துவிட்டுப் போனதாக எழுதியிருந்தாய். தொலைகிறான் போ. மூன்று வருஷம் கழித்து வந்திருக்கிறான். இன்னும் ஆறு வருஷம் உள்ளே இருக்க வேண்டியவன்.

நம் குழந்தை துளசி எப்படி இருக்கிறாள்?

திருமணத்துக்கு நீ அவசியம் வரவேண்டும். அது விஷயம் நான் கவனித்துக் கொள்கிறேன். விஜயவாடாவில் ஒரு ஆபீஸர் நண்பரின் மனைவி யென்றும் அவர் வர முடியாமல் போய்விட்டதென்றும் சொல்லி விடலாம். உன்னை யாருக்கு இங்கு தெரியும்?

அப்புறம்?.... முத்தங்கள்.

வருகிற சரியான தேதிக்குக் கடிதம் எழுதுகிறேன். அன்புக் காதலன்.

—இரண்டு கடிதங்களும் ஒரே தேதி முத்திரைகளைத் தாங்கிக் கொண்டு ஒரே ஆர். எம். எஸ். வண்டியில் பயணம் செய்தன.

(தொடரும்)

*திருத்தலம் கண்டேன்:*

# யாழைப் பழித்த மொழியாள்

—வே. இந்திரசித்து—

**த**ஞ்சை மாவட்டத்தில் 'இன்று-வேதாரண்யம்' என்று வழங்கப்படுகிற ஊரே முன்னாளில் 'திருமறைக்காடு' என்ற திருப் பெயரால் அழைக்கப்பட்டு வந்தது.

இத்திருக்கோயிலில் இறைவன் வேதநாயகனாக, வேதபுரீஸ்வரராக, திருமறைக்காட்டிறைவனாகக் காட்சி தருகிறான். திருமறைக்காடு பற்றியும், அங்கு எழுந்தருளியிருக்கும் வேதநாயகனைப் பற்றியும் பல மெய்யடியார்கள் தீந்தமிழ்ப் பாடல்கள் பாடியுள்ளனர்.

'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்பார்கள். நாம் ஆலயத்தின் கோபுரத்தைத் தரிசித்துவிட்டு ஆலயத்தினுள் சென்றால் அவ்வாலயத்தின் திருவாயிற் கதவுகளே நமக்கு ஒரு வரலாற்றைக் கூறுகிறது.



✖ முன் கோபுரம்

பண்டை நாளில் வேதங்கள் வேதநாயகனை வழிபட்டனவாம். அந்நாளிலிருந்து இவ்வாலயத்தின் திருக் கதவுகள் சாதாரண மானுடர்களுக்காகத் திறக்கப்படாமலேயே இருந்தனவாம். மறைக்காட்டு மக்கள் வேறு ஒரு வழியே சென்று இறைவனை வழிபட்டு வந்தனர். இச்செய்தியை அறிந்த திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் வேதநாயனின் ஆலயத்தை அடைந்தார்கள். சம்பந்தரின் அருள்மொழிப்படி அப்பரடிகள், 'பண்ணினேர் மொழியாள்' என்று தொடங்கும் பதிகம் பாடினர். இறைவன் அவருடைய பாட்டிலே உருகிக் கதவுகளைத் திறக்கச் செய்தாராம். பின்னர் இருவரும் நேர்முக வாயில் வழியே சென்று இறைவனைக் கண்டு 'என்பு கரைய உள்ளுருகி'ப் பாமாலைகள் பாடினர். திருவாலயத்தினின்று வெளியில் வரும்பொழுது அப்பர் பிள்ளையாரை நோக்கித் 'திருக்கதவுகள் அடைக்கப் பாடி அருளும்' என வேண்ட பிள்ளையாரும் 'சதுரம் மறை' என்று தொடங்கும் இன்றமிழ்ப் பதிகப் பாடல் இசைத்திட கதவுகள் அடைக்கப்பட்டனவாம். அன்று முதல் இறைவனை நேர் வழியாகச் சென்று தரிசிக்கும் பாக்கியம் அனைவருக்கும் கிடைத்தது.



✖ மணி கன்னிகை தீர்த்தம்

கருவறையில் 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்' விளங்குகின்ற சிவலிங்கத் திருவுருவத்தைக் கண்டு வழிபடுவோம். சிவலிங்கத்தின் பின்னால் சிவபெருமான் தன் அருட் சக்தியான அம்பிகையோடு மணக் கோலத்தில் வீற்றிருந்து அருள் பாலிக்கும் காட்சியைக் கண்டு மகிழலாம். 'கும்ப முனி' என்று போற்றப்படும் அகத்திய



✖ புவனி விடங்கன்

முனிவருக்கு இறைவன் இத்தலத்திலே அம்பிகையோடு மணக் கோலத்தில் காட்சி அளித்தான் என்பது ஐதீகம்.

பிராகாரத்தில் விநாயகர், முருகன் ஆகியோருக்குத் தனிச் சந்நிதிகள் இருப்பது போலவே அலைமகளுக்கும் கலைமகளுக்கும் தனித் தனி சந்நிதி உண்டு. இங்கு வீணையைக் கையில் ஏந்தாத, அதிசயமான கலைமகளின் திருவுருவம் இருக்கிறது. இதற்கும் சுவையான கதையொன்று இருக்கிறது.

இங்கு எழுந்தருளியிருக்கும் அம்பாளின் திருப்பெயர் 'யாழைப்பழித்த மொழியாள்!' ஒருமுறை கலைமகள் தன் வீணை இசையினால் எல்லாரையும் மகிழ்வித்தாளாம். அவ்விசையைக் கேட்ட மலைமகள் மிக இனிமையாக இருக்கிறதே' என்று பாராட்டினாளாம். உமாதேவியாரின் திருவாயினின்றும் வெளிப்பட்ட அமிழ்தினுமினிய சொற்களைக் கேட்டு, உமையவளின் மொழி தன் யாழிசையின் இனிமையினும் அதிக இனிமையாக இருப்பதை உணர்ந்து, நாணி, தான் இசைத்த யாழைக் கீழே வைத்து விட்டாளாம். ஆகவேதான் கலைவாணி வீணையில்லாமல் இங்கு இருக்கிறாள்.

இந்த 'யாழைப் பழித்த மொழியாளை வணங்கி வழிபடுவோர்க்கு ஞானமும், புகழும் உண்டாகும் என்பது ஆன்றோர் வாக்கு.

சிவஞான சிரேஷ்டரான தாயுமான சுவாமிகள் அவதரித்த மற்றொரு சிறப்பும் இத்தலத்துக்கு உண்டு.

-புகைப்படங்கள்: ராமகிருஷ்ணா

# பரதமா? சரி! கராத்தேயா? ரெடி!



இரண்டு துருவங்களான பரத நாட்டியக் கலையிலும் கராத்தே கலையிலும் சிறப்பான தேர்ச்சி பெற்று விளங்கும் கருணாவின் திறமைகள் பிரமிப்பூட்டுகின்றன.

நான்காவது வயதிலிருந்து பரதக் கலையையும், ஒன்பதாவது வயதிலிருந்து 'ஷிடோ ரியோ' முறை கராத்தே கலையையும் பயின்று கராத்தேயில் 'பிரவுன்' பெல்ட் அணியும் தகுதி பெற்று உள்ளார்.

இவரது தந்தை பாண்டிச்சேரி ஷிடோ ரியோ கராத்தே சங்ககூட்டமைப்பின் பொதுச் செயலாளர், சகோதரர் குணசேகரன் பிளாக் பெல்ட் அணியும் தகுதி பெற்ற கராத்தே வீரர்.

கராத்தே பயிற்சிக்கு இவர்களது ஊக்கத்தையும், பரதப்பயிற்சிக்குத் தாயின் ஊக்கம், நடன ஆசிரியை வனஜா நாராயணனின் உதவி இவற்றையும் நினைவுகூர்கிறார் கருணா.

அடையாறு செயின்ட் மைக்கேல்ஸ் பள்ளியில் படிக்கும் இவர் படிப்பிலும் திறமையானவர். பள்ளியில் விளையாட்டுத் திடலிலும் நிறையப் பரிசுகள் பெற்றுள்ளார்.

''நீங்கள் பாட்டுக்குக் கராத்தே, பரதம் என்று போய்க் கொண்டிருந்தால் நாளைக்கு வரப்போகும் கணவருக்கு குடும்பம் நடத்த வேண்டும், சமைத்துச் சாப்பிட்டாக வேண்டும் என்கிற கவலை ஏற்படுமே!'' என்று கேட்டால்,

'எங்கள் கருணா சமையலிலும் ஓர் எக்ஸ்பர்ட் ஆக்கும்... எந்தப் பெண்ணுக்கும் மணமானால் கணவன் குடும்பம் என்று ஈடுபாடு ஏற்படாமலா போய்விடும்' என்றார் கருணாவின் தாயார்.

-பி. ரங்கநாயகி



# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்.




பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK&E PS.7 TM

# நிலாவெல்லாம் நித்யா 6

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:

















அதே நேரத்தில்—
... அதனாலே, உண்மையைச் சொல்லிடறதுதான் உனக்கு நல்லது சார். என்ன, புரியுதா?




இவன் என்ன, பயம் காட்டறது? இல்லே, உண்மையாகவே என்னைக் குற்றவாளி ஆக்கிடுவாங்களா? தப்பிப் போகதலன்று உண்மையைக் கண்டு பிடிக்க முடியாதே! ...ம்...




என்ஜின் திணறுது. பெட்ரோல் குறைஞ்சிடுச்சுன்னு நினைக்கறேன். அந்த பங்கிலே பெட்ரோல் போட்டுக்கலாமா?
செய்யலாமே!




ரெண்டே நிமிஷம்... கொஞ்சம் இறங்கிக் கிறீங்களா?
ஓ! தாராளமா!




அடுத்த நொடியில்—
அடப்பாவி! ஏமாத்திட்டானே!
தொடரும்

# அன்பர் பணியில் இன்ப நிலை!



பி.எஸ்.ஜி. ரங்கசாமி நாயுடு



திருமதி கிருஷ்ணம்மாள்





பி.எஸ்.ஜி. ரங்கசாமி நாயுடு நூற்றாண்டு விழாவில் திருமதி சந்திரகாந்தி நன்றியுரை வழங்குகிறார். அருகில் சுவாமி சித்பவானந்தா

அன்று அங்கு பூளைச் செடிகள் பூத்துக் குலுங்கின. அதனால் அது பூளைமேடு என்று அழைக்கப்பட்டது. நாளடைவில் பெயர் திரிந்தது. பூளைமேடு பீளைமேடாயிற்று. நாமம் சிதைந்தது. ஆனால் புகழ் பெருகியது. கோவையிலுள்ள பீளைமேடு இன்று தொழில் கல்வி இவற்றின் ஒருங்கிணைந்த வளர்ச்சியால் பொலிவு பெற்று, புகழுடன் திகழ்கிறது.

இந்த வளர்ச்சிக்குப் பெரிதும் காரணமானவர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு. அவரது நூற்றாண்டு விழா இம்மாதம் 3ம் தேதி கோவையில் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. அத்துடன் ஜி. ஆர். ஜி.- பயனீர் ஸ்தாபனங்களின் வெள்ளி விழாவும் சிறப்பாக நடைபெற்றது. 1956ல் ரங்கசாமி நாயுடுவின் மனைவி கிருஷ்ணம்மாளின் நினைவாகப் பெண்கள் உயர்நிலைப் பள்ளி ஒன்று துவக்கப்பட்டது. இதுவே ஜி. ஆர். ஜி. கல்வி ஸ்தாபனங்களின் வித்தாக அமைந்தது.

''பயனீர்'' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு முன்னோடி என்று பொருள். ரங்கசாமி நாயுடு இன்றுள்ள பல கோவை மில் அதிபர்களுக்கு முன்னோடி என்பதால் அவரும் அவருக்குப்பிறகு அவர் குமாரர் ஜி. ஆர். கோவிந்தராஜுலுவும் நிறுவிய ஆலைகளுக்குப் பயனீர் என்ற பெயர் பொருத்தமே.

ஜி. ஆர். ஜி. டிரஸ்ட் 1958ல் நிறுவப்பட்டது. அதன் கீழ் இன்று ஒரு பெண்கள் கல்லூரி, ஒரு மகளிர் பாலிடெக்னிக், ஒரு பெண்களுக்கான ஹையர் செகண்டரி பள்ளி, ஒரு மெட்ரிகுலேஷன் பள்ளி, இரண்டு உயர்நிலைப்பள்ளிகள், இவைகளுடன் இணைந்த நர்சரி, மற்றும் பிரைமரி பள்ளிகள் இயங்கி வருகின்றன. இந்தக் கல்வி நிறுவனங்களில் மொத்தம் சுமார் 8000 மாணவ, மாணவிகள் படிக்கிறார்கள். சுமார் 350 ஆசிரியர்கள் பணிபுரிகின்றனர். தென்னிந்தியாவில் பெண்கள் கல்விக்கு இத்தகைய பணி புரிந்த ஒரே ஸ்தாபனம் ஜி. ஆர். ஜி. அறக்கட்டளைதான் என்றால் மிகையாகாது. இந்தக் கல்வி ஸ்தாபனங்களில் ஒழுக்கமும், கட்டுப்பாடும் இன்றும் நிலவி வருவது மகிழ்ச்சி

பி.எஸ். ராமமூர்த்தி

யைக் கொடுக்கிறது. ஆசிரியர்களும், ஆசிரியைகளும் சீருடை அணிந்து வருவது இந்த நிறுவனங்களின் சிறப்பான அம்சம்.

இந்த நல்ல செயல்களுக்கெல்லாம் இயக்கும் சக்தியாகத் திகழ்கின்றனர் தொழில் அதிபர் ஜி. ஆர். கோவிந்தராஜுலுவும், அவரது துணைவியார் சந்திரகாந்தியும்.

ஜி. ஆர். ஜி. குடும்பத்தினருக்கு நடமாடும் தெய்வமாக விளங்குகிறார் சுவாமி சித்பவானந்தா. 25 ஆண்டுகளுக்கு முன் கிருஷ்ணம்மாள் உயர்நிலைப் பள்ளி துவக்கப்பட்டபோது அதற்கு ஆசி வழங்கிய சுவாமிகள் அதன் வெள்ளி விழாவிலும் கலந்துகொண்டது மிகப் பொருத்தமாக இருந்தது. உடல் நலம் குன்றியிருந்தாலும் அவரது உள்ளத்தில் உறுதியும், கருத்தில் தெளிவும், குரலில் கம்பீரமும் காணப்பட்டன. ரெங்கசாமி நாயுடுவுடன்நெருங்கிப் பழகியவர் சித்பவானந்தா. நாயுடுவின் தாராள மனப்பான்மைக்கு இரண்டு சம்பவங்களை நினைவுகூர்ந்தார். 1926ம் ஆண்டு ஊட்டியில் ராமகிருஷ்ண ஆசிரமத்தைத் துவக்கியபோது நாயுடு ஓர் இரும்பு கேட்டையும், பிறகு ஒரு நூலகத்தையும் அளித்தாராம். 1940ல் உலகப் போர் நடந்து கொண்டிருந்த சமயம் திருப்பராய்த்துறையில் ராமகிருஷ்ண தபோவனம் நிறுவப்பட்டது. அப்போது இரும்பு தங்கத்தை விட மதிப்பு வாய்ந்திருந்தது. அதற்கு அவ்வளவு தட்டுப்பாடு. தபோவனத்திற்கு மிக உறுதியான இரும்புக் கதவு தேவைப்பட்டது. முகம் சுளிக்காமல் அதைச் செய்து அனுப்பினாராம் நாயுடு. காலத்தினால் செய்த இந்த உதவி மறக்க முடியாதது என்றார் சித்பவானந்தா.

ஜி.ஆர்.ஜி. - பயனீர் ஸ்தாபனங்களின் வெள்ளி விழா நிகழ்ச்சி தற்போதைய கல்வி நிலை பற்றிய கருத்தரங்காக அமைந்தது. வரவேற்புரை நிகழ்த்திய சந்திரகாந்தி கல்வி வளர்ச்சியில் தமிழ்நாடு 15வது ஸ்தானத்துக்குத் தள்ளப்பட்டதைக் குறிப்பிட்டு வருத்தம் தெரிவித்தார். தலைமை தாங்கிய சி. சுப்பிரமணியம் கல்வித் துறையை அரசியல்வாதிகளின் சூதாட்டப் பலகையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்றார். விழாவைத் துவக்கிய ஆளுனர் சாதிக் அலி உண்மையான கல்வி வளர்ச்சியைச் சேவை மனப்பான்மை கொண்டவர்களால் நடத்தப்படும் கல்வி ஸ்தாபனங்களில் மட்டுமே தாம் கண்டதாகக் குறிப்பிட்டார். விழாவில் பங்கேற்ற ஜி. கே. தேவராஜுலு, ஜி.ஆர். ஜி. கல்வி நிலையங்கள் ஒழுக்கம், கட்டுப்பாடு இவைகளின் உறைவிடம் என்று பாராட்டினார்.

ஜி. ஆர். ஜி. ஸ்தாபனங்கள் கல்வி வளர்ச்சிக்கான சோதனைக் கூடங்களாக அமைந்துள்ளன. உதாரணமாக, பெரிய நாயக்கன்பாளையத்தில் உள்ள பயனீர் மில்ஸ் உயர்நிலைப் பள்ளியில் 1000 மார்க் திட்டம் என்ற அமைப்பின் கீழ் பரீட்சைக்காக 500 மார்க்கும், ஒழுக்கம், விளையாட்டில் தேர்ச்சி, நூல் நிலையத்தை நன்கு உபயோகித்தல், கையெழுத்துப் பழகுதல், முதலியவற்றுக்காக 500 மார்க்கும் அளிக்கப்படுகின்றன. இத்திட்டம் யுனெஸ்கோவின் பாராட்டுதலைப் பெற்றுள்ளது. சமுதாயத்தில் சிறந்த முறையில் வாழ வழி காட்டும் நூறு திருக்குறள் பாக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவை மாணவர்களுக்குப் போதிக்கப்படுகின்றன. ஜி. ஆர். ஜி. மகளிர் பாலிடெக்னிக் தான் இந்தியாவிலேயே முதல் முதலாகப் பெண்களின் வேலை வாய்ப்புக்கு வழி செய்யும் பாடத் திட்டங்களை அமல்படுத்தியது.

பல சாதனைகளைப் புரிந்தும் அடக்கத்தின் சின்னமாக விளங்குகிறார் சந்திரகாந்தி. 'ரங்கசாமி நாயுடுவின் கனவுகளில் பத்தில் ஒன்றைக்கூட நாங்கள் நனவாக்கவில்லை' என்று கூறினார்! இந்தத் தன்னடக்கம்தான், பெண்கள் கல்வி வளர்ச்சிக்காக ஜி. ஆர்.ஜி. டிரஸ்ட் மேலும் பல திட்டங்களை வகுக்கக் காரணமாக இருக்கிறது. பெண்களுக்காக ஓர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி நிறுவப்பட இருக்கிறது. மேலும் தற்போது இயங்கும் கல்வி ஸ்தாபனங்களின் அபிவிருத்திப் பணிக்காக ஜி. ஆர். ஜி. டிரஸ்ட் 25 லட்ச ரூபாயை வழங்கியுள்ளது என்று வெள்ளி விழாவில் அறிவிக்கப்பட்டது.

ஜி. ஆர். ஜி. குடும்பத்தினரின் தரும சிந்தனைக்கும், சமூக சேவைக்கும் எல்லையே இல்லை. 'ரங்கசாமி நாயுடுவுக்கு நான்கு புதல்வர்கள். அறக் கட்டளைகள் அன்னாரது ஐந்தாவது மகனாகக் கருதப்படுகிறது' என்பதை உணர்ச்சி பூர்வமாகத் தெரிவித்தார் ஓர் அன்பர்.

இறை வணக்கம் பாடிய ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, ''அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டாய்'' என்ற தாயுமானவரின் பாடலை உருக்கமாகப் பாடினார். ஜி.ஆர். ஜி. குடும்பத்தினரின் உள்ளக் குரலைத்தான் எம். எஸ். எதிரொலித்தாரோ என்று தோன்றியது. ''இன்ப நிலை தானே வந்தெய்து''வதில் வியப்பென்ன?

''மாறுவேஷப் போட்டியில் பைத்தியக்காரனா நடிச்சு இரண்டாவது பரிசு வாங்கினேன்!''
''நீ நடிக்காமெ சும்மா வந்து நின்னிருந்தியானா உனக்கு முதல் பரிசே கிடைத்திருக்கும்!''
-அ.தெ.



# உங்கள் முதலீடு

# இரட்டிப்பு

# ஆக வேண்டுமா?

## 6 ஆண்டுகளில் 12% கூட்டு வட்டியுடன் இரட்டிப்புக்கு மேல் ஆகும் 6 வருட தேசிய சேமிப்புப் பத்திரங்களை வாங்குங்கள்

**6 வருட தேசிய சேமிப்புப் பத்திரம் 6-வது வெளியீடு**

- இப் பத்திரம் ரூ. 10, 50, 100, 500, 1000 மற்றும் ரூ. 5000-த்திற்குக் கிடைக்கிறது.
- ரூ. 100 முதலீடு செய்தால் 6 ஆண்டுகளுக்குப் பிறகு ரூ. 201.50 பெறலாம். இதே போல எவ்வளவு தொகை முதலீடு செய்கிறீர்களோ அவை 6 ஆண்டுகளுக்குப் பிறகு இரு மடங்கிற்கும் மேலாகப் பெருகுகிறது.
- தேவையானால் 3 ஆண்டுகளுக்குப் பிறகு முதலீட்டுத் தொகையை கூட்டு வட்டியுடன் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

**6 வருட தேசிய சேமிப்புப் பத்திரம் 7-வது வெளியீடு**

- இப் பத்திரம் ரூ. 100, 500, 1000 மற்றும் 5000-க்குக் கிடைக்கிறது.
- வட்டி விகிதம் 12%. 6 மாதத்திற்கு ஒரு முறை வட்டி வழங்கப்படும்.
- தேவையானால் 3 ஆண்டுகளுக்குப் பின் திரும்பப் பெறலாம்.

**இரண்டு பத்திரங்களின் பொது அம்சங்கள்:**

- வருமான வரிச் சட்டம் பிரிவு 80(L)-ன் படி வட்டிக்கு ரூ. 3000 வரை வருமான வரி விலக்கு உண்டு.
- இப்பத்திரங்களில் முதலீடு செய்யப்படும் தொகைகளுக்கு தனி நபருக்கு ரூ. 1,50,000 வரை சொத்து வரி விலக்கு உண்டு.
- தேசிய உடமையாக்கப்பட்ட வங்கிகளை விட வட்டி கூடுதலாகக் கொடுக்கப்படுகிறது.

மேலும் விவரங்களுக்கு அருகாமையிலுள்ள அஞ்சலகத்தினை தொடர்பு கொள்ளவும்.

எதிர்காலத் தேவைகளுக்கு எளிதாக பணம் பெற இன்றே தேசிய சேமிப்புப் பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

EP. DIPR



மேலும் விவரங்களுக்கு
இயக்குநர்
**தமிழ்நாடு அரசு சிறு சேமிப்புத் துறை**
143, அண்ணா சாலை, சென்னை-600 002.




## 6

காதலன் வரத் தாமதமானதால் கோபமும் ஏக்கமும் மிகக் காத்திருக்கும் காதலியைப் பின்புறமிருந்து அமைதியாய் அவளறியாது வந்து மிருதுவாக ஆலிங்கனம் செய்கிற காதலனைப் போலத் தென்றல் பைய வந்து சோழ மாளிகையின் மேல் மாட நிலா முற்றத்தைச் சூழ்ந்து தழுவியது. கீழ் வானத்தில் ஒரு செம்பொன் தாம்பாளமாகப் பூரணச் சந்திரன் உதயமாயிற்று. பழையாறை நகரின் வீடுகளில் தீபங்கள் ஏற்றப்பட, கவியும் இருளில் இங்கொன்றும், அங்கொன்றுமாய்த் தென்பட்ட விளக்கொளிகள் சீக்கிரமே நூறு ஆயிரம் எனப் பெருகி எங்கு பார்த்தாலும் மினு மினுக்கத் தொடங்கின. இக்காட்சியைச் சோழ மாளிகையின் மேல் மாடத்திலிருந்து விஜயாலயன் பார்த்த போது அவனுக்குக் கானகத்தில் இரு தினங்களுக்கு முன்பாக ஏறத் தாழ அதே மாலைப் பொழுதில் தான் கண்ட ஆயிரக் கணக்கான மின்மினிப் பூச்சிகள் நினைவுக்கு வர, கூடவே அன்றைய உல்லாசங்களையும் எண்ணிப் பார்த்து உடல் சிலிர்த்தான்....

பிற்பகலில் குவளை அவனுக்குக் கானகத்தின் சில அதிசயங்களைக் காண்பிப்பதாகக் கூறி அழைத்துப் போனாள். அந்த நாடோடி மக்களின் குடியிருப்பு எல்லையைக் கடந்து காட்டுக்குள் சிறிது தூரம் சென்றதுமே ''குவளை! குவளை!'' என்று ஒரு கிரீச்சிடும் குரலைக் கேட்டு திடுக்கிட்ட விஜயாலயன் வியப்புடன் சுற்று முற்றும் பார்த்தான். குவளை கலகலவென்று சிரித்தபடியே அவனுக்கு ஒரு மரக் கிளையைச் சுட்டிக் காட்டினாள். அங்கே அடர்ந்த இலைகளுக்கிடையில் மறைந்தும் மறையாமலும் இருந்த ஒரு பஞ்ச வர்ணக் கிளி துணிவு பெற்று தன் உடலைச் சற்றே அசைத்து மறுபடியும் ''குவளை! குவளை!'' என்று கிரீச்சுக் குரலில் அவளை அழைத்தது.

ஒன்றையொன்று நெருங்கி நின்று உடலுராய அன்புப் பரிமாற்றம் செய்துகொண்டிருந்த இரு மான்கள் இவர்களைக் கண்டு துணுக்குற்றுத் துள்ளி ஓட யத்தனித்து பிறகு, 'ஓ, நம் குவளைதானா?' என்றெண்ணியது போல அமைதியுற்றுத் தங்கள் காதல் விளையாட்டைத் தொடர்ந்தன!

முயல்கள் இரண்டு, புதர் மறைவிலிருந்து எட்டிப் பார்த்துவிட்டு அவர்களது தனிமைக்கு இடையூறு விளைவிக்க விரும்பாதவை போலப் பாய்ந்தோடி மறைந்தன. குரங்கு ஒன்று மட்டும் கிளைக்குக் கிளை தாவியும், வாலைக் கிளையில் சுற்றிக் கொண்டு தலைகீழாகத் தொங்கி ஊஞ்சலாடியும் சதா அவர்கள் கவனத்தைக் கவர முயன்றும் அவர்களைப் பின்தொடர்ந்து கொண்டும் இருந்தது.

இவை போன்ற காட்சிகளும், பட்சி ஜாலங்களின் கண்டங்களிலிருந்து எழுந்த பலவித ஒலிகளும் கானகத்தின் மரங்கள்—மூலிகைகளிருந்து பிறந்த பலவித வாசனைகளும் குவளை கைக்கெட்டும் தூரத்தில் இருந்த சில பழங்களைப் பறித்துத் தர அவற்றின் ருசியும் காட்டில் பகுதிக்குப் பகுதி மாறிய வெப்ப தட்ப நிலைகளும் எல்லாமாகச் சேர்ந்து ஐம்புலன்களுக்கும் வேலை கொடுக்க, அவர்கள் அவற்றை நிதானமாக அனுபவித்தவாறே மேலே நடந்தார்கள்.

சற்று தூரம் இப்படிச் சென்ற பின் விஜயாலயன் அதி அற்புதமான ஒரு காட்சியைக் கண்டு பிரமித்தான்! உயரம் அதிகமில்லாத ஒரு பாறையிலிருந்துதான் ஆற்று நீர் அருவியாக விழுந்ததென்றாலும் அதன் வேகமும் அங்கு பல பாறைகள் மையப் பட்டிருந்ததால் ஏற்பட்ட தடங்கலும் ஒன்றை யொன்று விஞ்ச முயன்றதால் நீர், வெண்ணுரையாகப் பொங்கியும் ஆவியாக நீர்ச் சிதறல்களை உருவாக்கிக் கொண்டும் சுழித்தபடி ஓடியது. அந்தப் பாறை வட்டத்துக்கு அப்பால் அகன்று ஒரு தெளிந்த நீரோடையாகவும் அது கடுகிப் பாய்ந்தது. அரிசிலாற்றின் ஒரு கிளைதான் அப்படி அங்கு பாய்கிறது எனக் குவளையைக் கேட்டறிந்து கொண்ட அவன் சற்று நேரம் மனோகரமான அந்தக் காட்சியில் தன்னை மறந்து ஈடுபட்டிருந்தான். பிறகு தன் உடலில் இனவெடுப்பதை உணர்ந்து ''குவளை! நாலு நாட்களாக உன் கட்டளைக்குக் கட்டுப்பட்டு நான் குளிக்கவில்லை; இந்த இடத்தில் நான் நீராடியே ஆகவேண்டும்'' என்றான்.

''நன்றாகக் குளியுங்கள்! அதற்காகவே தான் நான் இங்கு உங்களை அழைத்துவந்தேன். நாலு நாளில் காயங்கள் எல்லாம் பெருமளவு ஆறியிருக்கும் என்பது



மட்டுமல்ல; இப்பகுதியில் மூலிகை வேர்கள் பூமியில் ஆழப் படர்வதாலும் பல பச்சிலைகள் உதிர்ந்து மண்ணுடன் மண்ணுவதாலும் அதன் மீதாகப் பாய்ந்து வரும் இந்த நீருக்கே மருந்தாகும் மகத்துவம் உண்டு. உங்கள் காயங்கள் நன்கு குணமாக இந்த நீர் உதவவே செய்யும்'' என்றாள்.

அதன்படியே விஜயாலயன் ஆனந்தமாக நீண்ட நேரம் அந்தச் சிற்றாற்றில் மூங்கித் திளைத்துக் குளித்தான். ஒரு முறை அவன் நீருக்கு வெளியே தலை நீட்டி அதனைச் சிம்மம் போல் ஒருமுறை உலுக்கி கைகளால் முகத்தில் இருந்த நீரை வழித்துவிட்டு இமைகளைத் திறந்து பார்த்தபோது அவன் இதயத் துடிப்பையே சில கணங்களுக்கு நிறுத்திவிடுகிற சக்தி படைத்த ஒரு தோற்றத்தைக் கண்டான். சற்றுத் தூரத்தில் ஆறு அதிகமான எதிர்ப்பைக் காணாது அமைதியாகப் பாய்ந்த இடத்தில் — குவளை ஒரு மச்ச கன்னிகையின் லாகவத்துடன் நீந்திக் கொண்டிருந்தாள். மான் தோலினாலான மார்புக் கச்சு தவிர இடையிலிருந்து முழங்கால் வரைக்குமே நீண்ட அவள் உடையானது எளிதாக நீந்த வழி வகுத்த காரணத்தால் அவள் கால்களால் தண்ணீரை அடித்துத் தாக்காமல் ஒரு மீன் நகர்வது போலவே வெகு நளினமாக நீந்தினாள். அவள் கரங்களும் மீனின் சிறகுத் துடுப்புகளைப் போல நீரிலே அசைந்து அவளை முன்னேற்றிச் சென்றன. நீரிலே அவள் உடல் மறைந்தும் மறையாமலும் இருந்ததானது வடிவப் பொலிவை மிகைப்படுத்தவே செய்தது. ஒரு சமயம் அவள் நீருக்குள் மறைந்த போது விஜயாலயன் தானும் மூழ்கிக் கண் திறந்து பார்க்க, அவள் உடல் ஓர் அரை வட்ட வளையமாக நீருக்குள் சுழலும் அழகைக் கண்டு அந்த வில்லுக்கு நாணாகத் தன் உடலைக் கொண்டு போய்ப் பொருத்த ஆசைப்பட்டான். ஆனால் அதற்குள் அவனுக்கு மூச்சு முட்டவே மேலே காற்றைச் சுவாசிக்க வரவேண்டியதாகி விட்டது. அவன் மறுபடி நெஞ்சில் காற்றை நிரப்பிக்கொண்டு மூழ்க யத்தனித்தபோது அவள் தலை நீர் மட்டத்துக்கு மேலே குவளை மலராகத் தெரிந்தது. அவனைப் பார்த்து அவள் தன் கொடிக் கரத்தை உயர்த்தி அசைத்துச் சிரித்தாள். அது அழைப்பல்ல என்றாலும் அழைப்பாகத் தான் எண்ணிவிட்டது போல் பாசாங்கு செய்து விஜயாலயன் அவளை நோக்கி வேகமாக நீந்த ஆரம்பித்தான். அதைக் கண்டதும் அவள் விளையாட்டான அச்சத்துடன் ஒரு கணம் இரு கரங்களாலும் தன் வாயைப் பொத்திக் கொண்டு மலங்க மலங்க விழித்தாள். அடுத்த நொடியில் அபார ஆற்றலுடன் வேகமாக நீந்தி ஓர் எம்பு எம்பி ஒரு வட்டப் பாறையில் கரையேறி அமர்ந்து கொண்டாள். சற்று நேரத்துக்குள் அவளை விஜயாலயன் நெருங்கி வந்தபோது அவன் நீரில் இறங்கு முன் அங்கு உருவிப் போட்டிருந்த உத்தரீயத்தை அவள் வெகு உரிமையுடன் எடுத்துத் தன் தோள்களையும் கால்களையும் துடைத்துக் கொண்டிருந்தாள். பிறகு சாவகாசமாகத் தன் தலையையும் துவட்டிக் கொண்டாள். விஜயாலயன், தன் உடல் பாதி நீரிலும், பாதி நீர் மட்டத்துக்கு மேலேயும் இருக்க, பாறை மீது கைகளை மடித்துப் போட்டு, அதில் முகவாயை ஊன்றி, அவளுடைய ஒவ்வொரு செயலின் தனித் தனி நொடிப்பையும் கண்கொட்டாமல் பார்த்து எழில் சிதறலை ரசித்தான். தலை துவட்டியானதும் அவள் மண்டியிட்டு அந்தத் துணியை அலசிப் பிழிந்தாள். அவனிடம் நீட்டினாள். ஓர் எம்பலில் இலகுவாக அவளருகே அமர்ந்து உத்தரீயத்தைப் பெற்றுக் கொண்ட அவன் அதனுடன் சேர்த்து அவளையும் தன் பால் இழுத்தான். மறுப்பேதும் காட்டாது அவன் தோளில் சிரம் சாய்த்தாள். ஈரமான நெஞ்சிலே உஷ்ணமான அவளுடைய மூச்சுக் காற்றுக் குலாவியது.

''குவளை!'' என்று அவன் காதருகே கரகரத்த மெல்லிய குரலில் அழைத்தான்.

''கோமகனே!'' என்று அவனது உயர் பிறப்பை நினைவூட்டினாள்.

''இந்தக் கணம் உன் அடிமை'' என்றான்.

அவள் தலைநிமிர்ந்து அவன் அதரங்களைத் தனது நீண்ட மெலிந்த விரல்களால் பொத்தினாள். ''சோழ நாட்டு இளவரசர் பேசுகிற சொற்களா இவை! ஆணை இட வேண்டியவர் அடிமையாவதா? எடுத்துக்கொள்ள வேண்டியவர் யாசிப்பதா?'' என்று கேட்டவாறே உத்தரீயத்தால் அவன் மேலிருந்த நீர் திவலைகளை ஒற்றி எடுத்தபடியே அந்த மார்பின் அகலத்தையும் ஆண்மையையும் அளந்தாள். கூடவே தொடர்ந்து பேசவும் செய்தாள். ''இளவரசே! உங்கள் இதய சிம்மாதனத்தில் மட்டும்தான் நான் கொலுவீற்றிருக்க முடியும்; ராஜ்ய சிங்காதனத்தில் அமர இந்த ஏழைக்கு என்றுமே வாய்ப்பு கிட்டாது—தெரியும். என் உற்றமும் சுற்றமும் உங்களுடைய அந்தப்புறத்தில் ஆசை நாயகியாகக் கூட அல்ல; ஒரு சேடியாக என்னை நீங்கள் ஏற்றுச் சென்றால் கூட மகிழ்வார்கள்; பெருமையாகக் கருதுவார்கள். என்னை எனக்காக அல்லாது உத்தமசீலி என்ற ஒரு செருக்கு மிக்க குலமகளைத் தாற்காலிகமாக மறப்பதற்காகவே இந்தக்



குறமகளிடம் இன்பம் துய்க்க நீங்கள் எண்ணலாம். ஆனால் அதைக்கூட ஒரு பாக்கியம் என்று கருத வேண்டிய நிலையில்தான் நான் இருக்கிறேன். ஆனால் அன்பே! இவ்வளவு தாழ்நிலையில் உள்ள அடியாளுக்குக் கூட ஓர் ஆசை இருக்கலாம் அல்லவா?''

அவனுடைய கண்களைத் தவிர்த்து நெஞ்சிலே தன் பார்வையைப் பதித்தவாறு பேசிய குவளையின் நெற்றியிலே நெகிழ்ச்சியுடன் முத்தமிட்டு மிருதுவாகக் கேட்டான்: ''என்ன ஆசை?''

''ராணி என்ற பதவி வேண்டாம். தாலி கட்டிய மனைவி என்ற மதிப்பையாவது கொடுங்கள். என்னை இப்போதே, இந்தக் கணமே அடைய உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால் அந்த அதிகாரத்தைத் துறந்து என் பெற்றோரிடம் என்னைப் பெண் கேட்கிற பண்பைக் காட்டுங்கள். காட்டிலே பிறந்து வளர்ந்தவள் நான். ஆனால் நான் வாழ்க்கைத் துணைவனாக அடையப் போவது ஒரு கோமகனை என்பதை மறக்க முடியுமா? அதற்கேற்ப, என் முதலிரவு காட்டிலே ஓர் ஆற்றங்கரைப் பாறையில் முடிவுற வேண்டாம்; நாட்டிலே, அரண்மனையின் சயனக் கிருகத்திலே மலர் மஞ்சத்திலே முதலிரவைக் கழித்து நான் துயிலெழக் கருணை புரியுங்கள்!''

''கண்ணே!'' என்றழைத்த விஜயாலயன், அவள் கன்னங்களைத் தன் கரத்தில் ஏந்தி முகத்தை உயர்த்தி வெட்கத்தால் மூடியிருந்த கண்ணிமைகளை முத்தமிட்டான். ''அப்படியே ஆகட்டும்'' என்றான் பெருந்தன்மையுடன்.

அவர்கள் கரம் கோர்த்தபடி குடியிருப்புப் பகுதி நோக்கி மெல்ல நடந்தார்கள். மோக மயக்கத்தினூடே அவன் இதயத்தை அரித்துக் கொண்டிருந்த கேள்வியை அவனால் கேட்காதிருக்க முடியவில்லை. ''குவளை! என் தோற்றம் — விகாரத் தோற்றம்— உனக்கு அருவருப்பைத் தரவில்லையா!''

அவள் சிரித்தாள். ''இளவரசே! உங்கள் இதயத்தை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிற உத்தமசீலியிடம் காணப்படும் செருக்கை இந்தக் குவளையிடமும் எதிர்பார்க்காதீர்கள்!... மருந்து மூலிகைகளையும் பச்சிலைகளையும் வைத்து வைத்தியம் பார்க்கிறவர்கள் நாங்கள். காயம் ஆறியதும் உடலில் காணப்படும் தழும்புகள் எங்கள் ஆற்றலுக்குச் சான்று பகர்கின்றவை. அவற்றை நாங்கள் எப்படி விகாரமென வெறுக்க முடியும்? வீரர்களின் விழுப் புண்கள் தாம் பெரும்பாலும் எங்கள் வாழ்க்கையையே அமைத்துத் தருகின்றன. மேலும் இளவரசர் விஜயாலய சோழரின் பராக்கிரமமும் மனிதாபிமானமும் உலகறிந்தவையல்லவா? பழையாறை மக்களை விஜயாலயன் பெருந் தீயிலிருந்து காத்ததையும் அதையொட்டி ரவிகுல திலகன் என்ற விருதையும் இளவரசுப் பட்டத்தையும் ஓர் விழாவில் பெற்றதையும் கூத்து அமைத்து ஊர் ஊராகச் சென்று எத்தனை முறை ஆடிக் காட்டியிருக்கிறோம் தெரியுமா? அந்த வீர வடிவத்தை நான் எப்படி வெறுக்க முடியும்?''

கேட்கக் கேட்க விஜயாலயன் மகிழ்ச்சியில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள

கஜபதி அண்ட் கோ

கமல்















முடியாமல் அவளைக் கட்டி அணைத்தான்.

அப்போது நடந்ததை இப்போது எண்ணிப் பார்க்கையிலும் மேனி சிலிர்த்தது விஜயாலயனுக்கு. அதே நேரத்தில் மன்னர் கேட்ட கேள்வியின் உள் நோக்கமும் புரிந்தது. குவளையின் குலப் பிறப்பு எப்படியானாலும் அவள் குணச் சிறப்பு எத்தகையது என்று அறியவே அவர் அந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறார்!

விஜயாலயன் சுருக்கமாக விளக்க, "நல்லது மகனே! மன உறுதி கொண்ட பெண்ணாகத்தான் தோன்றுகிறாள்" என்ற குமாராங்குசன், தொடர்ந்து பேசினார்: "சோழ குலத்தை அவமதித்த முத்தரையரைப் பழி வாங்க வேண்டுமென்றும் உத்தமசீலியை அடைந்தே தீர வேண்டுமென்றும் அவள் மமதையை அடக்க வேண்டும் என்றும் இதற்கெல்லாம் முதல் படியாகத் தஞ்சையைத் தாக்க வேண்டுமென்றும் நீ நினைப்பது சரிதான். இந்த அளவுக்காவது ஆத்திரம் உன்னிடம் உருவாகியிராவிட்டால் நான் ஏமாற்றமே அடைந்திருப்பேன். ஆனால் நடைமுறையில் நீ நினைப்பதொன்றும் எளிதில் நிறைவேறும் காரியங்கள் அல்லவே!"

"சுலபம் என்று நான் சொல்லவில்லையே அப்பா!"

"மைந்தா! இரண்டு நாள் முன்னதாக பல்லவச் சக்கரவர்த்தியின் பழையாறைப் பிரதிநிதி என்னைக் காண வந்தார்...."

"யார்? மாதண்ட நாயகர் பாராசிரயனா?"

"ஆம் மகனே! 'விஜயாலயன் ஏன் இன்னும் திரும்பவில்லை? அவனுக்கு என்ன ஆயிற்று? அவன் வேட்டைக்குத்தான் போனானா; அல்லது வேட்டைக்குப் போவதாய்ப் போக்குக் காட்டி விட்டு வேறெங்காவது சென்றானா?' என்றெல்லாம் விசாரித்தார். நீ சக்கரவர்த்திக்கு எதிராய் ஏதோ சதிச் செயலில் ஈடுபடுவதாய்த் தாம் சந்தேகிப்பதை அவர் ஒளிக்கவே இல்லை. நீ மெய்யாலும் வேட்டைக்குத்தான் சென்றுள்ளாய் என அவருக்கு நிரூபித்து நம்ப வைப்பதற்குள் எனக்குப் போதும் போதுமென்றாகி விட்டது!"

"அப்பா! என்ன கொடுமை இது! வேட்டைக்குப் போகவும் கானகத்தில் காணாமல் போகவும் கூட இனி பல்லவ சக்கரவர்த்தியின் அனுமதி பெற வேண்டுமா நாம்?"

"அப்படியிருக்க, நீ கூத்து நடத்தி மக்களிடம் வீர உணர்ச்சி ஊட்டுவதை மாதண்ட நாயகர் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாரா?"

"இது இறை உணர்வை வளர்ப்பதாகத்தானே வெளிப் பார்வைக்குத் தோன்றப் போகிறது, அப்பா! பல்லவப் பிரதிநிதியைக் கொண்டே ஒரு கூத்து அரங்கையும் ஆதுரச் சாலையையும் தொடங்கி வைக்கச் சொல்வோமே!"

"சரி, அவ்வாறே இங்கு மக்களிடம் வீர உணர்ச்சியை வளர்க்கிறாய் என்போம். அது மட்டும் போதுமா? படை திரட்ட வேண்டாமா, தஞ்சையைத் தாக்க? நாம் ஓரளவுக்கு மேல் படை பலம் பெருக்கக் காஞ்சியின் அனுமதி இல்லை என்று தெரியாதா உனக்கு? அப்படியே நீ ரகசியமாய்ப் படை திரட்டி விடுகிறாய்; காலம் கனிய, தஞ்சை மீது படையெடுக்கிறாய் என்று வைத்துக் கொண்டாலும் பல்லவ சக்கரவர்த்தியும் அவரது மாதண்ட நாயகரும் அதைப் பார்த்துக்கொண்டு பேசாமல் இருப்பார்களா? நம்மைப் போலவே முத்தரையரும் காஞ்சிக்குத் திறை செலுத்தும் ஓர் சிற்றரசர்தானே? அவருக்குப் பாதுகாப்புத் தரவேண்டியது பல்லவ சக்கரவர்த்தியின் கடமையல்லவா? பல்லவப் பேரரசின் படைகள் காஞ்சியில் மட்டுமா இருக்கின்றன? இங்கு பழையாறையிலும் முத்தரையரின் தலைநகர் சந்திரலேகையிலும் நீ படையெடுத்துக் கைப்பற்ற எண்ணுகிற தஞ்சையிலும் கூட பல்லவர்களின் மேலாதிக்கப் படைகள் உண்டு என்றும் இவற்றை அவசியம் நேரும்போது பயன்படுத்த ஆங்காங்கே உள்ள பல்வேறு மாதண்ட நாயகர்களுக்கு அதிகாரம் உண்டு என்பதும் உனக்குத் தெரியாதா?"

"தெரியும் தந்தையே. இந்த இடையூறுகளை வெல்ல உபாயங்களும் தெரியும்!"

"மகனே! குறமகள் குவளையிடம் எல்லாவற்றையும் பேசி முடித்துப் பெரிய திட்டத்துடன் திரும்பியிருக்கிறாய் போலும்" என்று இலேசாக ஏளனம் குரலில் எட்டிப் பார்க்கக் குமாராங்குசன் கூறவும் இளவல் அந்தப் பரிகாசத்தைத் தாங்க முடியாமல் துடித்தெழவும் நிலைமை கவலைக்கிடமாய்ப் போகு முன்னர் நல்ல வேளையாக ஆகவ மல்லன் பெரும் பரபரப்புடன் ஓடிவந்து, "பிரபோ! பல்லவ மாதண்ட நாயகர் வந்து கொண்டிருக்கிறார்! தந்தையும் மகனும் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருப்பதாக நான் கூறியும் அவர் கேட்கவில்லை" என்று மூச்சிறைக்கக் கூறி முடிப்பதற்குள், "பல்லவ சக்கரவர்த்திக்குத் தெரியக் கூடாத அந்தரங்கம் ஏதும் இருக்க முடியாதாகையால்தான் அனுமதிக்குக் காத்திராது வரத் துணிந்தேன்" என்று அதிகாரக் குரலில் பேசியபடியே நெடிதுயர்ந்த ஓர் உருவம் அந்தமேன்மாட நிலாமுற்றத்துக்குள் ஆணவ நடை போட்டு நுழைந்தது! (தொடரும்)

அவன்: "உங்க பெண்ணை நான் கல்யாணம் பண்ணிக்கப் பிரியப் படறேன்"
பெண்ணின் தந்தை: "உனக்குக் குடிப் பழக்கம் உண்டா?"
அவன்: "அவசரமில்லே, கொஞ்சநேரம் ஆகட்டும். முதல்லே கல்யாணத்தைப்பத்திப் பேசலாம்"
-ஈ. சோமசுந்தரம்



பரபரப்பான அலுவலக நேரம். அதாவது அட்டண்டென்ஸ் புத்தகத்தில் கையெழுத்திடுகிற வரை. அதற்கு அப்புறம் யார் எங்கே போனாலென்ன என்கிற மாதிரி ஒரு மனோபாவம்.

டீக்கடை. மரத்தடி மேடைகள். வெற்றிலை சிகரெட் விவகாரங்கள். இல்லையென்றால் புடவை வியாபாரம் முதல் புளிக் காய்ச்சல் ஊறுகாய் வியாபாரம் வரை எல்லாம் நடக்கும்.

எப்போதாவது 'தலை' போகிற மாதிரி தபால் வந்து மேலதிகாரி கூப்பிடுகிறார் என்று ஏவலாள் வந்து குண்டைப் போடுகிற வரை ரொம்பவும் சுகமான உத்தியோகம்.

பரபரப்பை விழுங்கிக் கொண்டு ஒரே கூச்சல் கேட்டது. பேனாவையும் பைல்களையும் போட்டது போட்டபடி விட்டு விட்டு எல்லோரும் ஓடினார்கள்.

பத்து இருபது நாற்பது என்று மனிதர்கள் கூடுவதைப் பார்த்துவிட்டு மிரண்டு போய் அது பொந்தில் நுழைந்து கொண்டது.

சரியான முரட்டுப் பாம்பு. செங்கல் இடுக்கில் முழுவதும் போய்விட முடியாமல் பருமனான உடம்பு கொஞ்சம் வெளியே தெரிந்தது.

ஒரே அடியாய்த் தலையை நசுக்கி அதை வெளியே இழுத்துப் போட்டார்கள். அது பரலோகம் போயிற்று.

செத்தது பாம்புதான் என்றாலும் மனசு ரொம்பவும் சங்கடப்பட்டது. கிழேகிடந்த பாம்பின் வயிற்றில் மேடாக ஒரு வீக்கம். சற்று முன்னால் அந்தப் பாம்பு விழுங்கிவிட்ட தவளையோ எலியோ!

ராஜு சொன்னார்:

''பாம்புக்குப் பல்லுலேதான் விஷம். உடம்பு பூரா விஷமா நெளியற மனுஷன் போயிப் பாம்பை அடிச்சிட்டானே?''

பல நேரங்களில் ராஜுவின் தத்துவ மழை எனக்குப் புரியாது. இது மட்டும் ரொம்பவும் சரியான பேச்சு என்று தோன்றியது.

எந்த வகையில் பார்த்தாலும் நண்பர்களின் செயல் நியாயமற்றதுதான். இரையை விழுங்கிவிட்டுத் தன்போக்கில் போய்க்கொண்டிருந்த அந்தப் பாம்பு ஒரு நாளும் மனிதனுடைய உணவைப் பறிக்கப் போவதில்லை. ஏனோ அடித்து விட்டார்கள். யாருக்கு எதைக் கண்டு பயம்?

எப்படியோ தவளையை விழுங்கிய பாம்பு விவகாரம் அலுவலக நேரத்தில் ஒரு மணி நேரத்தையும்தான் விழுங்கி விட்டது.

மத்தியானம் சாப்பிட்டு இடை வேளையின்போது மனம் பெரி



தும் வேதனைப்பட்டது தலை நசுக்கப்பட்டுப் பரிதாபமாய்ச் செத்துப்போன அந்தப் பாம்பு நினைவில் ரொம்பவும் தாராளமாய் வளைய வந்தது. அவள் டப்பாவில் போட்டுக் கொடுத்தனுப்பியிருந்த சாதம் ஒரு துளிக்கூட விழுங்க முடியவில்லை. அப்படியே வெளியேஎடுத்துக்கொட்டினேன். காக்கைகள் பசியாறின. அணில்களை விரட்டிவிட்டன.

நர்மதா வந்து நின்றாள். ''என்ன சார் ஒரே யோசனையில் மூழ்கிட்டேளே!''

அவளுக்கே இயல்பான சிரிப்பு... கன்னர்! என்றால் என்ன விலை என்று கேட்கிற மனோபாவம்.

பாம்பைச் சீண்டி அடித்த பேர்வழிகள் நினைவுக்கு வந்தார்கள். ராஜுவின் பொன்மொழி உதிர்ப்பும் மறுபடி நினைவுக்கு வந்தது. ''உடம்பெல்லாம் விஷமா நெளியற மனுஷன்....''

நர்மதாவைச் சுற்றி நெளிகிற விஷ மனிதர்களைப் பற்றி அவளுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. அவளுடைய உலகம் மிகவும் வித்தியாசமானது.

''என்னம்மா! ஏதாச்சும் விசேஷம் உண்டா? நேத்திக்கு லீவு போட்டிருந்தியே...'' என்று கேட்டேன். அவள் பரிதாபமாகப் பார்த்தாள்.

''ஆமாம் ஸார். யாருக்கும் சொல்ல வேண்டாம்னு இருந்தேன். ஸக்ஸஸ் ஆனச் சொல்லிக்கலாம்னு. ஆனா வழக்கப்படிதான் ஆச்சு. இப்ப வேறே ஒரு காரணம். வேலையிலே இருக்கிற பொண்ணு அவாளுக்கு வேண்டாமாம். கல்யாணத்துக்கு அப்புறம் வேலையை விட்டு நின்னுடணும்னு சொன்னா. அதுக்கு நான் சம்மதிக்கலே.''

வேடிக்கையான பெண், விந்தையான மனிதர்கள். எனக்குத் தெரிந்து இந்த நர்மதா வீட்டில் ஓசி டிபன் சாப்பிட்ட ஏழாவது கும்பல் இது.

நர்மதாவின் தீர்மானம் சரியில்லை என்றே எனக்குப் பட்டது. எத்தனை நாளைக்கு அவள் மனமெல்லாம் விஷமாகிப் போன மனிதர்களுக்கு இடையில் அகப்பட்டுத் தவிக்க முடியும்?

''என்ன சார் யோசனை பண்றேள்? எட்டு வருஷமாச்சு... இந்த உத்தியோகத்திலே,

இனிமே இதை விட்டுட்டு ஒரேயடியா விலகிடணும்னு அது எனக்குச் சம்மதமாப் படல்லே. அப்பாவுக்குக்கூட என் மேலே வருத்தம். அம்மாவும் கண்டபடி திட்டிஞ.''

ரமணி வந்தான். மகா வக்கிரமான பேர்வழி. ''என்ன மாமியை நேத்திக்குக் காணல்லியே....'' என்று வழிந்தான்.

அவன் ஒரு விஷம். அலுவலகத்தில் உள்ள அத்தனை பெண்களுக்கும் தானேதான் ரோமியோ என்கிற நினைப்பு அவனுக்கு. அநியாயச் சீண்டல்காரன். பல நேரங்களில் நெருப்புப் பெண்களிடம் வாங்கிக் கட்டிக் கொள்ளவும் அவன் வெட்கப்பட்டதே இல்லை.

இந்த நர்மதா நெருப்பா வெறும் நீறுதாஞ என்று இதுவரை நிருபணமாகவில்லை. அந்தத் துணிச்சலில் கொஞ்சம் தாராளமாகவே இவளிடம் பல்லைக் காட்டுகிறவன்.

''என்ன ரமணி? என்ன விஷயம்? இந்த மாமி கிடக்கட்டும். உன் மாமி விஷயம் என்ன ஆச்சு? கோவிச்கண்டு ஊருக்குப் போஞளே... வந்தாச்சா? சமாதானம் ஆயிடுத்தா?''

என்னை ஒரு மாதிரியாக முறைத்துவிட்டு அந்தப் பக்கம் போஞன் ரமணி.

நிச்சயம் ஒரு நாள் அவன் எவளிடமாவது வித்தியாசமாய் அடிபட்டால் கூட யாருக்கும் வியப்பேற்படாது.

''நல்ல வேளை சார்! சனி ஒழிஞ்சுது. இன்னிக்குப் பூரா இந்தப் பக்கம் தலைகாட்டாது. தப்பிச்சேன்'' என்ருள் நர்மதா.

''அது கிடக்கட்டும் விடு. உன் விவகாரம் என்னன்னு பார்க்கலாம். எப்படிப் பார்த்தாலும் உன்ஞேட முடிவு சரியில்லே. எத்தனை நாள் இப்படியே டைப் ரைட்டரைக் கட்டிண்டு உன்ஞலே அழ முடியும்னு நினைக்கறே?''

அவளுக்கு என்ன பதில் சொல்வதென்று தோன்றவில்லை. விழித்தாள்.

''இந்த மாதிரி விஷ ஜந்துக்கள் ஊர்ந்திண்டிருக்கிற பூமியிலே உனக்குன்னு யாராவது ஒரு 'எக்ஸ்' வேணும். ஏன் இந்த மனுஷனை அந்த எக்ஸா இருக்கப்படாது? யாரு அந்தப் பிள்ளையாண்டான்னு சொல்லு. நான் காம்ப்ரமைஸ் பண்ணிப்பார்க்கறேன்.''

அவள் சொன்ஞள். முகவரியைக் குறித்துக்கொண்டேன். சாயங்காலம் அலுவலகம் முடிந்து வீட்டுக்குப் போகிற வழியில் அந்த முகவரிக்கு உரியவர்களைக் கண்டுபிடிப்பதும் சுலபமாய் இருந்தது.

என்னை அறிமுகம் செய்து கொண்டேன். ரொம்பவும் சுருக்கமாக விவரத்தைச் சொன்னேன். பையன் இல்லை. அவனுடைய அப்பாதான் கிடைத்தார்.





# இன்றைக்கு என்ன கேடு?

**கா**லை ஆஸ்பத்திரிக்குப் போகும்போது டாக்டர் ஜனார்த்தனம் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். முதல் எடுப்பிலேயே தமது புதிய நோயாளியிடம் போனார். ''நான் சொல்லப்போவதை மிகவும் கவனமாகக் கேள். இனிமேல் நீ உன் வேட்டியைக் கிழிக்கக் கூடாது. ஒவ்வொரு நாளும் மாலையில் உன்னைப் பார்ப்பேன். வேட்டியைக் கிழித்துக் கொள்ளாமல் இருந்தாயானால் தினந்தோறும் உனக்கு ஐந்து ரூபாய் கொடுப்பேன். என்ன சொல்லுகிறாய்?'' என்று மிகவும் அன்பாகக் கேட்டார்.

இதைக் கேட்டதும் அந்தப் பைத்தியத்தின் முகம் தெளிந்தது. மிகுந்த குதூகலத்துடன் தலையை ஆட்டிச் சம்மதம் தெரிவித்தது.

அதைப் பார்த்ததும் டாக்டருக்கு நம்பிக்கை பிறந்தது.

அன்று மாலை ஆறு மணிக்கெல்லாம் டாக்டர் அந்தப் பைத்தியத்தைப் பார்க்கச் சென்றார். என்ன ஆச்சரியம்! வழக்கம் போல் அவன் வேட்டியைக் கிழித்துக் கொள்ளவில்லை. டாக்டர் முகத்தில் திருப்தி நிலவியது. உடனே ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவனிடம் கொடுத்தார்.

ஞாயிற்றுக் கிழமை வழக்கம்போல் மாலை நேரத்தில் மிகவும் உற்சாகத்துடன் அந்தப் பைத்தியக்காரனைப் பார்க்கச் சென்றார் டாக்டர்.

இது என்ன அநியாயம்! அந்தப் பைத்தியம் எப்போதும் போல் வேட்டியைத் தோரணம்போல் கிழித்துக் கொண்டு அந்தக் கிழிசலோடு உட்கார்ந்திருந்தான்.

கோபத்துடன், ''ஏன் இன்றைக்கு ஒப்பந்தத்தை மீறினாய்? உனக்குப் பணம் கொடுக்க மாட்டேன்'' என்றார்.

பைத்தியக்காரனுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. ''இது என்ன அக்கிரமம்! நீங்கள் சொன்னபடி ஒரு வாரம் நடந்துகொண்டேனே இல்லையா?.....'' என்று கத்தினான்.

''.....ஆமாம். யார் இல்லை என்றது? இன்றைக்குமட்டும் உனக்கு என்ன கேடுவந்தது?''

''இன்றைக்கு என்ன கேடு என்று கேட்கிறீர்கள். இன்றைக்கு ஞாயிற்றுக் கிழமையில்லையா? இன்றுகூட எனக்கு லீவு கிடையாதா?'' என்று இரைந்தது பைத்தியம்.

டாக்டர் ஜனார்த்தனத்துக்கு மூளை குழம்ப ஆரம்பித்து விட்டது.

-ஸோமாஸ்

அவர் முகம் களித்தே இருந்தது. என் தலையீட்டை அவர் விரும்பியதாய்த்தெரியவில்லை.

''பெண்ணைப் பெற்றவரே வந்து கேட்டால் கூட எனக்குச் சம்மதமில்லை சுவாமி. கல்யாணமான பெண்கள் உத்தியோகம்னு போறது எங்கள் குடும்பத்தில் வழக்கமே இல்லை. அதான் அந்தப் பெண்ணை வேலையை விட்டு நிற்க முடியாதுன்னு தீர்மானமாச் சொல்லிப்பிட்டாளே பிறகென்ன?''

''பத்து வருஷங்களுப்பலே உத்தியோகம் பார்த்துப் பழகிட்ட பெண். அதான் தயங்கறு. உத்தியோகம் தனக்கொரு பலம்னு அவ நினைக்கிறதைத் தப்புன்னு சொல்ல முடியாதுன்னுதான் நான் நினைக்கிறேன். அப்புறம் உங்க பிரியம்....''

நான் வீட்டுக்கு வந்து சேர்ந்து நீண்ட நேரமாகியும் மனசு அமைதியடைய வில்லை. சண்பகம் எதை எதையோ கேட்டபோதும் எனக்குப் பாம்பும், விஷ மனிதர்களும் அந்தப் பெண்ணுமே நினைவை ஆக்கிரமித்திருந்தார்கள்.

மறுநாள் அலுவலகம் போனபோது அவள் வரவில்லை.

''மாமி மறுபடி லீவ் போட்டுட்டாளா ஸார்?'' என்று இன்றைய கோட்டாவுக்காக வந்து நின்றான் ரமணி. எத்தனை முறை வாங்கிக் கொண்டாலும் அவனுக்குச் சுரணை வராது.

நர்மதாவின் தம்பிதான் வந்தான். ஒரு கடித உறையைத் தந்தான். அவள்தான் எழுதியிருந்தாள்.

''இன்னிக்குக் காலம்பற அந்த மனுஷான் மறுபடி வந்தா. 'பொண் இஷ்டப்படியே உத்தியோகம் பார்க்கட்டும்... எங்க பையன் மேலே அவளுக்குப் பூரணமா நம்பிக்கை ஏற்பட்டப்புறம் அவள் தொடர்ந்து உத்தியோகம் பண்ணவா போறா?'ன்னு கேட்டா. நிஜமாகவே எனக்கு உத்தியோகம் ஒரு பலம்னுதான் நினைச்சேன். இப்போ அது ஒரு பலவீனமோன்னு தோணறது. ரமணி மாதிரி இன்னும் யார் யாரோ மாதிரி எல்லாம் சுத்தி வர்ற சூழ்நிலையிலே பலவீனம் வெடிச்சுடறதுக்கு முன்னாலே நீங்க சொன்ன மாதிரி யாராவது ஒரு 'எக்ஸ்' கிட்ட ஒப்படைச்சுண்டுட்டா அதுதான் நிம்மதி....

இது ராஜினாமாக் கடிதாக இல்லை. கல்யாணம் ஆறவரைக்கும் லீவ்தான். அப்புறம் உத்தியோகம் பார்க்கிறதும் விட்டுட்டு நின்னுடறதும் அவாளோட பிரியப்படி..''

லீவ் லெட்டரை எடுத்துக் கையெழுத்துப் போட்டு உள்ளே அதிகாரி பார்வைக்கு அனுப்பினேன். 'என்ன?' என்று பார்வையாலேயே கேட்டபடி ரமணி நின்றான்.

''உன்னோட கற்பனை அந்தப்புரத்திலேருந்து ஒரு மெம்பர் குறையறது. இனிமே கல்யாணத்துக்கு அப்புறம்தான் நர்மதா உன் கண்ணிலே படப் போறா.''

அவன் போய்விட்டான். சரசரவென்று இலைகளின் ஊடே தோட்டத்தில் ஏதோ ஓடியது பாம்புதானா? அல்லது வெறும் ஓணானா?



# இதயம் பேசுகிறது

டைட்டிலில் 'மசாலா டைரக்டர் எஸ். ஏ. சந்திரசேகரன்' என்பதை ஒரு கை அழித்துவிட்டு, 'திரைக்கதை, டைரக்ஷன் எஸ். ஏ. சந்திரசேகரன்' என எழுதிக் காட்டுகிறது.

டைட்டிலில் அழித்து விட்டால் போதுமா? மனதிலிருந்து அழிக்க வேண்டாமா?

இருதய நோயாளி (புது முகம் விஜயராஜ்) தன் மனைவி மீது சந்தேகப்படுகிறான். அந்தச் சந்தேகம் வலுப்பட சுந்தர் அறிமுகம் அவனுக்குக் கிடைக்கிறது. அவனது அறையில் அவனது மனைவியின் படம்....

நெஞ்சில் ஓர் ஆலயத்தில் பிறந்த கதையோ என நினைக்கத்தூண்டி. 'சப்'பென்று ஆகிவிடுகிறது.

மறதி புரொபஸர் மாதிரி தேங்காய் சீனிவாசன் அடிக்கடி தோன்றி அந்தக் கதையை மறக்கச் செய்கிறார். அவர் வாழ்க.

ரவீந்தரிடம் உன் காதலி பெயர் என்ன என்று கேட்க, அவர் மின் விசிறியைக் காட்டுகிறார். 'உஷா' என எழுதியிருக்கிறது. இந்த இடத்தில் கொஞ்சம் தலை நிமிரச் செய்கிறார். அப்புறம்?

புராணப் படங்கள் எடுப்பதில் ஹாலிவுட் கவனம் திரும்பியிருக்கிறது.

புராதனக் கிரேக்கக் கடவுள்கள் மானுடரால் வணங்கப்பட்டு அசாதாரண சக்திகளைப் பெற்றிருந்ததானது மாயா ஜாலக் காட்சிகளுக்கு வாய்ப்பளிக்கிறதென்றால் அந்தக் கடவுளர் ஏறத்தாழ மானுடர் போலவே பொறாமை, கோபம், காமம் போன்ற குண இயல்புகளைக் கொண்டிருந்ததானது கதை பின்ன ரொம்ப வசதியாக உள்ளது.

Clash of the Titans என்ற படத்தில் ஆண்ட்ரிமீடியாவின் கரம் பற்ற ஆசைப்படும் பெர்ஸியஸ் பல தடங்கல்களைச் சந்திக்க வேண்டியுள்ளது. மூன்று சூன்யக்காரிகள், இரண்டு தலை ஓநாய், கேசத்துக்குப் பதில் பாம்புகளாக வளரும் தலை கொண்ட மெடூஸா, இவ்வளவும் போதாதென்று விசுவரூப அளவினதான ஒரு பயங்கரப் பிராணி!

நல்லவேளை! இவற்றையெல்லாம் வெற்றி கொள்ள பெர்ஸியஸுக்கு ஒரு பறக்கும் குதிரையும் மாமேதையான ஒரு ஆந்தையும் உதவுகின்றன! ஆண்ட்ரிமீடியாவை பேராபத்துக்களில் இருந்து காத்து, காதலித்து திருமணமும் செய்து கொள்கிறான்.

ஹாலிவுட்டின் கவனம் நமது புராணங்கள் பக்கம் எப்போது திரும்பும்? ஹரே கிருஷ்ண இயக்கம் கூடவா இதைச் சாதிக்கவில்லை?

-த. மு. ர.

# இது என்ன பயங்கரம்...





# ஒரு வாரிசு உருவாகிறது

அன்றாடம் தேவைப்படும் சோப்புக்கும் பெருங்காயத்துக்கும் லாட்டரி அடிக்கும் குடும்பத் தலைவன் தன் மகனைக் கான்வென்டில் படிக்க வைக்கத் தன்னைச் சருகாக்கிக் கொள்கிறான். வளர்த்த கடா மார்பேல் பாய்கிறது.

கடைசியில் அவன் தன் தகுதியை உணர்ந்த போது தந்தையும் தாயும் காலமாகிவிடுகிறார்கள்.

மௌனி சுவற்றில் ஆணி அடித்த மாதிரி சம்பவங்களை ஓங்கி அறைந்து கதையைச் சொல்லியிருக்கிறார். அத்தனை சம்பவங்களும் அவசியம்தானா?

கதையில் எதைச் சுட்டிக் காட்டுகிறார் என்பதில் சற்றுக் குழப்பம் தெரிகிறது.

தகுதிக்கு மீறி மகனை வளர்க்கக் கூடாது என்கிறாரா? தன் நிலையை அவனுக்குப் புரிய வைக்கவில்லை என்கிறாரா? அனைவரும் அவரவர்கள் சக்திக்குத் தகுந்த மாதிரிதான் தன் பிள்ளையை வளர்க்க வேண்டுமென்றால், தகுதி வளர்வதுதான் எப்படி? கேள்வி எழுகிறது.

அந்த 'ஜெயந்த்' கதாபாத்திரம் அப்படி என்று வைத்துக் கொண்டு படத்தைப் பார்த்தால்....

பாராட்ட வேண்டியதுதான்!

படத்தின் ஆரம்பமே 'காதுகுத்தல்' சஸ்பென்சில் துவங்குகிறது. ஒன்றை நினைக்க வைத்து இன்னொன்று சொல்லும் இந்தக் 'குத்தல்' படம் முழுவதும் வியாபிக்கிறது. குட்டி, குட்டி சஸ்பென்ஸ்!

பிரதாப் மகனுக்காக காலில் செருப்பில்லாமல் ஆபீசுக்கு நடந்து போவதிலிருந்து அவனுக்குப் பரிசுப் பொருள் வாங்கப் பணம் தேவைப்பட்டபொழுது இரத்த தானம் செய்துவிட்டு மனைவியிடமே பொய் சொல்லி மறைக்கும் அளவுக்கு உயரும் தன் கதாபாத்திரத்தோடு தன் நடிப்பையும் உயர்த்திக் கொண்டுள்ளார்.

ஸ்ரீப்ரியா ஒப்புக்கு அம்மாவே தவிர பாசம், பரிவு, துடிப்பு, ஏக்கம் இவற்றில் அவரை பங்கு கொள்ள முடியாமலேயே செய்து விட்டனர். முழுச் சுமை அப்பா பக்கமே போய் விட்டது.

"எனக்கு எந்த வேடம் கொடுத்தாலும் அந்த வேடத்துக்கு உயிர் கொடுப்பேன்" என்கிறார் ஜெய்சங்கர். படத்தில் கான் மட்டுமல்ல, பெரிய ம'கானா'கவும் தன்னை உயர்த்திக் கொண்டு விட்டார் — நடிப்பில்! குறிப்பாக ஜெயிலில் இருந்து திரும்பிய பிறகு!

தேங்காய் சீனிவாசன்-மனோரமா ஜோடியை நீண்ட காலத்துக்குப் பிறகு ஒன்று சேர்க்க தயாரிப்பாளர் முன்வந்தாலும் கதையில் மகன் தேவு தடுத்து விடுகிறான். பிறகு சேர்த்து வைக்கிறான்.

எம். ஜி. ஆர். நடித்த படத்தின் கதையைச் சொல்லி பால் கறக்கும் மனோரமா பால் மட்டுமா கறக்கிறார்? நம்மிடமிருந்து சிரிப்பையும் கறந்து விடுகிறார்.

புது முகம் ராம்ஜியிடம் நல்ல அழகும் இருக்கிறது ஆற்றலும் இருக்கிறது. சிறிது நேரமே வந்தாலும் அசோகன், திலீப், பாஸ்கர், அனுமந்து, ஸ்ரீகாந்த், மாஸ்டர் சுரேஷ், மாஸ்டர் ராஜ்குமார், சுமலதா, உமா அத்தனை பேரிடமும் மௌனி வேலை வாங்கியிருக்கிறார்.

சனிச் சேரில் அமர்ந்தவாறே மகனைக் கண்காணிக்கும் சாருஹாசன் அடிக்கடி இடம் மாறுவது போல அலட்டிக்கொள்ளாத தன் நடிப்பால் நமது கவனத்தைக் கவர்கிறார்.

"அளவுக்கு மிஞ்சினால்..." இரை வசனத்தைத்தான் சொல்கிறேன். பொருந்தவில்லை.

டைரக்டர் மௌனிக்கு தான் நாடகாசிரியர் என்பது அடிக்கடி ஞாபகம் வராமலிருந்திருந்தால்....?

அவரும் ஒரு வாரிசுதான். யாருக்கு?



ஜெயலட்சுமியும் மகாலட்சுமியும்

"ஊரும் உறவும்" படத் தயாரிப்பாளரான ஏவி. எம். ராஜனை செட்டில் சந்தித்த போது அருகில் அவரது பெண் மகாலட்சுமியும் இருந்தார்.

"ஜெமினி கணேசனின் மகள் ஜெயலட்சுமி நடிக்க வந்து விட்டார். உங்கள் மகள் எப்போது?" என்றேன் ராஜனைப் பார்த்து.

"ஏப்ரல் 14ந் தேதிக்குப் பிறகுதான் நடிக்கப் போகிறாள். ஜாதகப்படி அதன் பிறகு அவளுக்கு நல்ல யோகம் இருக்கிறது" என்றார்.

## கமலைக் கொத்திய மயில்!

அன்று ஸ்டுடியோ வட்டாரங்களில் சிம்லாவில் கமலை மயில் கொத்திய செய்தி பற்றியே பேச்சாக இருந்தது.

வெளியில் நின்று கொண்டிருந்த சிரிப்பு நடிகர் மகேந்திரனிடம் ஏவி. எம். சரவணன் ''கமலை மயில் கொத்தியதற்கு நீங்கள்தான் காரணமாமே!'' என்று தமாஷாகச் சொல்லப் போய், ''ஐய்யய்யோ! நான் இல்லே'' என்று அவர் அலற வேடிக்கையாக இருந்தது. சிம்லாவில் வெண்பனி பெய்ததாம். அதைப் பந்துபோல் உருட்டி அதில் கோல்ட் ஸ்பாட்டை ஊற்றி சாப்பிடுவராம் கமல்!

சாருஹாசன் முதன் முதலாக டைரக்ட் செய்யப் போகும் 'புதிய சங்கமம்' படத்தின் துவக்க விழாவின்போதும் பலர் சாருவிடம் கமலைப் பற்றியே கேட்க ''பயப்படும்படி ஒன்றும் இல்லை'' எனப் பதில் அளித்துக் கொண்டிருந்தார் அவர்.

அப்பா டைரக்ட் செய்யப் போகும் படம் என்பதால் சுகாஸினியும் அவரது அக்கா நந்தினியும் பூஜைக்கு வந்திருந்தனர்.

''அப்பா படத்தில் பெண்ணுக்கு நடிக்க சான்ஸ் உண்டா?'' என்றேன்.

''பின்னே! நான் இல்லாமலா'' என்றார் சுஹாசினி.

அப்படத்திற்கு முதன் முறையாக இசை அமைக்கும் ராமச்சந்திரராஜாவை ஸ்ரீதருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் சாரு.

''இவருக்கு அடுத்த படம் கூட புக் ஆகி விட்டது. தாசரி நாராயண ராவ் தெலுங்குப் படம் ஒன்றுக்கு இவரைப் போடப் போவதாகச் சொல்லியிருக்கிறார். கதாசிரியராக இருந்தார். இப்பொழுது இசை அமைக்கிறார்'' என்றார்.

'எப்படி இவரைத் தேர்ந்தெடுத்தீர்கள்?' என்று நான் கேட்டதற்கு ''என்னை எப்படி இந்தப் படத்துக்கு டைரக்டராகத் தேர்ந்தெடுத்தார்களோ அப்படித்தான்'' என்று சாரு பதில் அளித்தார்.

'புதிய இசையமைப்பாளராயிற்றே. முதன் முறையாக எந்த வரியை ஒலிப் பதிவு செய்கிறார் பார்ப்போம்' என்று காதைத் தீட்டிக் கொண்டிருந்தபொழுது ''முகூர்த்த பிட். டேக் ஒன்' என்கிற குரலை அடுத்து இரண்டு வயலின்கள் 'வாதாபி கணபதி' பாடலை வாசிக்க ஒலிப்பதிவு தொடங்கிற்று. செண்டிமெண்ட்!

## தூக்கு மேடை!

பில்லா, ரங்கா இந்த இரண்டு பேருக்கும் அப்புறம் தூக்கு மேடை ஏறியது யார் தெரியுமா? நம்ம நடிகர் சந்திரசேகர்தான்!

ஆம்! தூக்கு மேடை படத்துக்காக அவரைத் தூக்குப்போடும் காட்சி எடுக்கும் சமயம் பார்த்தா நான் வாகினிக்குள் நுழைய வேண்டும்!

மேடை ரெடி! தூக்குக் கயிறு தொங்கிக் கொண்டிருந்தது. சந்திரசேகர் அரை நிஜாரும் பனியனும் அணிந்து சிரித்தபடியே ரெடியாக நின்று கொண்டிருந்தார்.

தூக்குக் கயிற்றுக்குத் தன் கழுத்தை நீட்டுவதற்கு முன்பு அவருக்கு ஒரு 'பரீக்ஷை' காத்திருந்தது. அதாவது வசனப் பரீட்சை. கலைஞர் கருணாநிதி பக்கம் பக்கமாக எழுதியிருந்த வீராவேசமான வசனங்களை ஒப்புவித்தபிறகுதான் சுருக்கு மாட்டப்படும்.

அன்று சிவாஜி கணேசன் பேசிப் புகழ் பெற்றது சந்திரசேகருக்குத் தெரியாமலா இருக்கும்? அதனால் உற்சாகமாகவும் உரக்கவும் அழுத்தம் திருத்தமாகவும் அதை அவர் பேசிக் கொண்டிருந்தார்.

''கொள்கைச் சத்தமிட்டோர் குரல் வளையை முத்தமிட்ட கயிற்றுக்கு என் கழுத்து மீது ஒரு 'காதலா? அந்தக் காதலை நிறைவேற்றக் காத்திருக்கும் என்னைப் பார்த்துக் கடுங்கோபம் கொள்ளாதே...''

இப்படியாக வீர வசனத்தை முழங்கி விட்டுக் கீழே இறங்கி வந்த சந்திரசேகரிடம் ''எப்படி வசனம்?'' என்றேன்..

. ''வீரமான வசனங்களைப் பேசும்போது நடிப்பதற்கே உற்சாகமாகத்தான் இருக்கிறது'' என்றார் தன் தாடியைத் தடவியபடி.

''நீங்கள் தாடியை எடுத்துவிடப் போவதாகச் சொன்னீர்களே!''

''ஆமாம்! இந்தப் படத்தின் காட்சிகள் முடிந்த பிறகு தாடியை எடுத்துவிடப் போகிறேன். அதனால் புதுப் படங்களில் தாடியுடன் நடிக்க ஒப்புக்கொள்ளவில்லை'' என்றார்.

டிபன் பிரேக் வந்தது. அங்கிருந்து புறப்படும் முன்பு ஒன்றை மட்டும் என் டயரியில் குறித்துக்கொள்ள விரும்பினேன்.

தூக்கில் தொங்குவதற்கு முன்பு பில்லா, ரங்கா என்ன சாப்பிட்டார்கள் என்று நியூஸ் வருவது போல இவர் என்ன சாப்பிடுகிறார் என்று கவனித்தேன்.

மூன்று இட்லி: நான்கு பஜ்ஜி! அவ்வளவு, தான்!

## காமிராவைச் சுற்றி









## மூச்!

● கால் விரலில் அணிய வேண்டிய படத்தில் தன்னை ஓரம் கட்டிவிட்டார்களே என மைனஸ் 'ஸ்ரீ' நடிகை மனதுக்குள் பொருமிக்கொள்கிறார்.

● வில்லனாகவே நடித்துப் பழக்கப்பட்டுப்போன நம்பி 'சாமி'க்குச்சாதாரண டயலாக்ஸ் அடிக்கடி மறந்து போகிறதாம்.

''எனக்குக் கோபமாகப் பேசியே பழக்கமாகிவிட்டது. காரெக்டர் ரோல் கொடுத்திருக்கிறார்கள். நல்லபடியாக நாலு வார்த்தை பேசிப் பழக்கமில்லை. அதனால்தான் இப்படி'' என்கிறார், அவர்.

● ''என்னைப் பற்றி நானே கிசுகிசுக்களைப் பரப்பி விடுகிறேன். அதைப் பார்த்த பிறகாவது நாலு தயாரிப்பாளர்களுக்கு என் நினைவு வராதா?'' என்கிறார் அழகுக்கு அரசியான அந்த நடிகை.

## பெயர்க் குழப்பம்

● பாரதி ராஜா தனக்குப் பிறந்த பெண் குழந்தைக்கு இன்னமும் பெயரே வைக்கவில்லை என்கிறார். படத்திற்குப் பெயர் வைப்பது போல ஓர் 'அழகான' பெயரை இவர் தேடிக் கொண்டிருக்கிறாரோ?

## பூந்தோட்டி

● நடிகை லதாவின் தம்பி ராஜ்குமார் இன்று மலையாளப் பட உலகில் கொடி கட்டிப் பறக்கிறார். மொத்தம் 27 படங்களில் கதாநாயகனாகவே இவர் நடிக்கிறாராம்.

மாதவியுடன் எட்டுப் படங்கள், அம்பிகாவுடன் ஆறு படங்கள், சொப்னாவுடன் ஏழு படங்கள் என்று அடுக்கிக் கொண்டே போகிறார்.

'சமஸ்காரம்' என்கிற ஒரே ஒரு படத்தில் மட்டும் லதாவும் ராஜ்குமாரும் சேர்ந்து நடிக்கிறார்கள். லதா அதில் அம்மா வேடத்தில் நடிக்கிறார்.

''ஹரிஹரன் டைரக்ட் செய்யும் எட்டுப் படங்களிலும் நான்தான் கதாநாயகன்'' என்கிறார் ராஜ்குமார்.

● முழுக்க முழுக்க சிலோனில் தயாரிக்கப்படும் படம் ஒன்றை டி. ராஜேந்தர் டைரக்ட் செய்யப் போகிறாராம். டைரக்ஷன் மட்டும்தானா என்று கேட்டு விடாதீர்கள். பா.இ.க.தி.வ. டை... (புரிகிறதா) எல்லாம் அவர்தான்!



## பெருமை

''நான் நடித்த முதல் படமான 'பல்லவி அனுபல்லவி' 'சங்கத கெண்டேதா' உலகப் பட விழாவில் கலந்துகொண்டது எனக்குப் பெருமை'' என்கிறார் புது முகம் தேவிகாராணி.

தமிழில் இவர் நடித்து வெளிவந்த முதல் படம்: இளிஞ்சல்கள்.

கன்னடப் பட உலகில் பிரபலமாக உள்ள புட்டண்ணா, பி. வி. கரந்த், கிரிஷ் கர்னாட் ஆகியவர்கள் அத்தனை பேருடைய படங்களிலும் நடித்திருக்கிறார்.

இயற் பெயர்: ஸ்ரீபிரமீளா.

படம்: 'டயெல்'





✖ லேனா



✖ பாலசுப்பிரமணியன்

# பொக்கிஷம்

"என் தந்தை தமிழ்வாணன் மறைந்துவிட்ட சமயம். பச்சையப்பன் கல்லூரியில் எம். ஏ. தமிழ் இலக்கியமும், டில்லி பல்கலைக் கழகத்தில் டிப்ளமா இன் ஜேர்னலிஸமும் படித்த நான் கல்கண்டு வார இதழுக்கு ஆசிரியர் பொறுப்பேற்றேன். அப்போது என் தமிழ்ப் பேராசிரியரும், என் தந்தையின் நெருங்கிய நண்பருமான டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் எனக்கு எழுதிய கடிதத்தை நான் இன்றும் பாதுகாத்து வருகிறேன். அதை என்றும் பாதுகாப்பேன்.'' என்று கூறி 'கல்கண்டு'லேனா இந்தக் கடிதத்தைக் கொடுத்தார்.

அன்புநிறை லேனாவுக்கு,

வாழ்த்து.

நலம், நலம் விழைவு.

என்னுடைய மாணவன் என்ற முறையில் உன்னுடைய வளர்ச்சி கண்டு நான் உண்மையிலேயே மகிழ்ச்சியும் பெருமிதமும் கொள்கிறேன்.

தமிழ் மரபுப்படி முறைப்படி உயர் தமிழ்ப் பயிற்சிக்குப் பெயர் போன பச்சையப்பர் கல்லூரியில் இலக்கிய இலக்கணம் பயின்றவன் என்ற முறையில் நீ இன்னும்கூட உன் எழுத்து நடையில் இலக்கண அமைப்பின் மீது நன்கு கவனம் செலுத்த வேண்டும். ஆதலால் இப்பொழுது எழுதுவது இலக்கணப்படி அமையவில்லை என்பது பொருளல்ல. மரபை மீறியும் எழுதலாம் என்ற எண்ணம் உனக்கு வந்து விடக்கூடாதே என்பதுதான். தற்காலப் பத்திரிகை உலகில் கடுமையான இலக்கண விதிகளைப் பின்பற்றினால் அது படிக்கும்படியாக இருக்காது என்று நீ சமாதானம் கூறக்கூடும். இது குறித்து விளக்கமாக நேரில் பேசுவோம்.

மற்ற பல மைந்தர்களைப் போல தந்தையின் புத்தகங்களை வெறும் மறு பதிப்புச் செய்து விற்றுக் கொண்டிருக்காமல் சுயமாக எழுதியும் ஆசிரியர் குழு என்ற அமைப்பின் கீழ் ஏராளமான அமைப்பாளர்களுக்கு வாய்ப்புத் தந்தும் புத்தகங்கள் வெளியிட்டு வருவது மனதிற்கு மகிழ்ச்சியைத் தருவதாக இருக்கிறது.

1976ல் எம். ஏ. படித்துக் கொண்டிருந்த போது சுற்றுலாச் சென்ற நீ காஷ்மீரிலிருந்து எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாய். அக்கடிதத்தை இன்னும் பத்திரமாக வைத்திருக்கிறேன். என்மனைவியிடமும் புகழ்மிக்க உன் தந்தையாகிய என் அருமை நண்பர் தமிழ் வாணனிடமும் அன்றே காட்டி, உன் தந்தைக்கு எழுத்துலகில் நீதான் சரியான வாரிசு என்று கூறினேன். அது உண்மையாகி விட்டது.

பி. யு. சி. படித்து முடித்தவுடன் நீ பி. காம்தான் படிக்க வேண்டுமென்றாய். தமிழை முதன்மைப் பாடமாக எடுத்துப்படி என்று யான் யோசனை சொன்னபோது நீ ஏற்றுக் கொள்ளத் தயங்கினாய். தமிழைப் படித்தால் கல்லூரி ஆசிரியராக மட்டும்தான் ஆகலாம், எனக்கு அந்தத் துறையில் நாட்டம் இல்லை என்றாய். பிறகு ஒரு வழியாகச் சம்மதித்தாய். இன்று நீ ஆசிரியராகத்தான் விளங்குகிறாய் பார்த்தாயா? ஆனால் ஒரே ஒரு வேறுபாடு. — பத்திரிகை உலகில்.

உன்னைப் பற்றி என் வட்டத்தில் குறிப்பிடும்போதெல்லாம் நல்லபடியாகவே சொல்கிறார்கள். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறு அடி பாயும் அல்லவா? இவை போன்ற பழமொழிகளாகவே திரும்பத் திரும்பக் குறிப்பிடுகிறார்கள். நன்றியுணர்வோடும், பழையவற்றை மறக்காமலும் இருக்கிறாரா என்று வினவுகிறார்கள். அந்நேரத்தி லெல்லாம் நீ ஒவ்வொரு தீபாவளி தினத்தன்றும் என் இல்லத்துக்கு வந்து என் காலில் விழுந்து வணங்கி ஆசிபெற்றுச் செல்லும் நற்பண்பைக் குறிப்பிடாமல் இருப்பதில்லை. நீ மேலும் மேலும் வாழ்க! வளர்க! தந்தை புகழ் சேர்க! வாழ்த்துக்கள்.

சி. பாலசுப்பிரமணியன்

பேட்டி: சந்திரமௌளி

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka